# கொலம்பியா

வெளியீடு



ஸங்கீத பூஷணம்

## S.V. பார்த்தஸாரதி

GE·6380

தத்வமறிய தரமா

(ரீதி கௌளை) 2 பாகங்கள்

## T.R. மஹாலிங்கம்

புல்லாங்குழல்

GE 6389

ராகம்–பியாக்–சிந்து பைரவி

காம்போதி–ராகம்–தானம்



## கும்பகோணம் சகோதரர்கள்

(சங்கரன் & விஸ்வநாதன்)



GE.6375

கண்ணன் வடிவை...

இன்னமும் தாமதமேன்

(வேதநாயகம் பிள்ளை கிருதி)

G.H. RAO

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ், 2.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்

மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

# பிரபல திருமணம்



சங்கூர் பிரபல பஞ்சு வர்த்தகரும் மிராசுதாரும் சென்னிமலை தேவஸ்தானம் மானேஜிங் டிரஸ்டியுமான ஸ்ரீ E. R. கந்தசாமிக் கவுண்டர் குமாரர் ஸ்ரீ R. K. சுப்பிரமணியத்துக்கும் சுந்தே கவுண்டன் சாவடி பிரபல மிராசுதாரர் ஸ்ரீ N. ராமசாமிக் கவுண்டர் குமாரத்தி ஸ்ரீமதி லக்ஷ்மிக்கும் ஆகஸ்ட் மாதம் 28-ந் தேதி திருமணம் வெகு விமரிசையாக நடந்தேறியது. பல பிரமுகர்கள் விஜயம் செய்தும் பரிசுகள், வாழ்த்துகள் அனுப்பியும் மணமக்களை ஆசீர்வதித்தனர். மாலையில் திருவனந்தபுரம் சகோதரிகளான ஸ்ரீமதிகள் இந்திரா—காமாக்ஷி பார்ட்டியாரால் பரதநாட்டியக் கச்சேரி சிறப்பாக நடந்தேறியது.

பரிசுகள் வழங்கியதற்கும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியவர்களுக்கும் தனித் தனியாக நன்றியை தெரியப் படுத்த இயலாதபடியால் இதன் மூலம் என் நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**E. R. கந்தசாமிக் கவுண்டர்**
பஞ்சு வியாபாரம், மிராசுதார்
சங்கூர்

★★★★★★★★★★★★★★★★★


பெண்களுக்கு முகவசீகரத்தை அளிப்பது...



ஐலெக்ஸ் கண்மை

பேசும் விழிகள் என்று கூறும் பெண்களின்.. கருவிழிகளை அலங்கரிப்பது, ஐலெக்ஸ் என்னும் "மை" தான்



PRODUCT OF
KANTHA LABORATORIES
...S. INDIA...

SOLE DISTRIBUTORS
RAMA TRADING CO.,
.....TRIPLICANE...MADRAS..

Studio menons

★★★★★★★★★★★★★★★★★

## ******* மயிலை சங்கீத சபா *******

**28—9—47 ஞாயிறு மாலை 6 மணிக்கு மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூலில்**



### ராதா — ஆனந்தி

பரதநாட்டியம் — அபிநயம்

**(கனம் மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் அவர்கள் முன்னிலையில்)**

**அபிநயத்துக்கு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பதங்கள் பாடுவார்.**

மயிலை சங்கீத சபையார் எட்டயபுரம் பாரதி மண்டப விழா நிதிக்காக ஒரு பண முடிப்பு அளிப்பார்கள்

டிக்கெட்டுகள்: ரூ. 10/- ரூ. 5/- ரூ. 2/- ரூ. 1/-


## அபாயகரமான நாசி கிருமிகளிடம் ஜாக்கிரதையாய் இருங்கள்



நாசிக் கிருமிகளினால் தொண்டை உபாதைகள் ஏற்பட்டு சுவாஸப் பையையும் பாதிக்கக்கூடும். வாயில் கரையும் போதே, கிருமி நாசன ஸ்வாஸ காரண பெப்ஸ் தொண்டைக்கு ஹிதமளித்து சுவாஸமிழுக்கும்போதே கிருமிகளைக் கொல்லும் உன்னத மருந்து சத்துக்களை வெளியிடுகிறது. இருமலை நிறுத்தி, வெந்துபோன மெல்லிய தோல்களுக்கு ஹிதமளித்து ரணத்தை ஆற்றி, சளியைப் போக்கி சுவாசப் பையிலுள்ள கிருமிகளைக் கொன்றும் பாதுகாக்கிறது.

# PEPS

எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்

## பெப்ஸ்

கிருமி நாசன ஸ்வாஸ மாத்திரைகளைச் சப்பிடுங்கள்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்




ஏஜண்டுகள்:—மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்

# கல்கி

## பொருளடக்கம்

| | | |
|---|---|---|
| மலர் 7<br>இதழ் 9 | செப்டம்பர் 28 | சர்வஜித்து<br>புரட்டாசி 12 |




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

'கற்பக விருட்சம்' என்பதாக ஒரு மகிமை வாய்ந்த மரம் இந்திர லோகத்திலே, பிரம்ம லோகத்திலே, சொர்க்க லோகத்திலே இருப்பதாக நம்முடைய புராணங்களும் பண்டைய இதிஹாசங்களும் கூறுகின்றன. அந்த மரத்தின் அடியிலே உட்கார்ந்து யார் என்ன கேட்டாலும் அது கொடுக்குமாம். அந்தக் கற்பக விருட்சத்தை நேரில் பார்த்தவர்கள் யாரும் இல்லை. அது எப்படி இருக்கும் என்பதும் நமக்குத் தெரியாது. ஆனால், நமது புண்ணிய பாரத பூமியிலே, முக்கியமாகத் தென்னிந்தியாவிலே, ஒரு கற்பக விருட்சம் அல்ல—பல்லாயிரக் கணக்கான கற்பக விருட்சங்கள் நம்முடைய ஆற்றங்கரை ஓரங்களிலும் வயல்கரை ஓரங்களிலும் செழித்து வளர்ந்திருப்பது நமக்கு நன்றாகத் தெரியும். அந்தக் கற்பக விருட்சம் தென்னை மரமே யாகும்.




தென்னை மரத்தைப் போல, மக்களுக்குப் பரம உபயோகமான மரம் ரொம்ப ரொம்பக் குறைவு. அடிமுதல் நுனி வரை, அதில் உபயோகமாகாத பகுதியே கிடையாது என்று சொல்லலாம்.

மனித குலத்துக்கு இவ்வளவு உபயோகமாக இருப்பதற்காகக் கடவுளால் படைக்கப்பட்ட இந்தக் காமதேனுவை—கற்பக விருட்சத்தை — நல்ல முறையில் பயன்படுத்தாமல், அமுதத்தை விஷமாக்கிக் குடித்து, சாக்கடையில் புரண்டு உருளும் மனிதனின் மதியீனத்தை என்னவென்று சொல்வது? அதற்கு உடந்தையாக இருந்து வந்த சர்க்காரைத்தான் என்னவென்று சொல்வது?

கள் இறக்குவதற்காகச் சென்னை மாகாணத்தில் மாத்திரம் வருஷம் ஒன்றுக்குப் பத்து லட்சம் தென்னை மரங்கள் உபயோகப் படுத்தப்படுகின்றன. இதனால், தேங்காய் மகசூலில் 10 கோடி தேங்காய் விளைவு நஷ்டமாகிறது. உணவுப் பஞ்சத்தால் ஜனங்கள் தவிக்கும் இந்தக் காலத்திலே தென்னை மரத்தைக் கள்ளுக்கு உபயோகப்படுத்துவது பெருந் தவறு அல்லவா? இதையெல்லாம் யோசித்துத்தான் தற்போதைய சென்னை மந்திரி சபையார் மதுவிலக்குச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதில் முனைந்திருக்கிறார்கள். அவர்கள் சென்ற வருஷத்தில் 8 ஜில்லாக்களில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். வரும் அக்டோபர் முதல் தேதியிலிருந்து மேலும் 8 ஜில்லாக்களில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வரப் போகிறார்கள். மேற்படி விசேஷ சம்பவத்தை முன்னிட்டு இந்தக் "கல்கி" இதழை மதுவிலக்கு இதழாகக் கொண்டு வருகிறோம். மதுவிலக்கு இயக்கத்துக்கு நடுநாயகமாக விளங்கும் தென்னை மரத்தை அட்டைப் படத்தில் வெளியிட்டிருக்கிறோம்.




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 9

# என்ன சேதி?

## அரிசி விலை

"ஆளைக் கண்டு மயங்காதே, ஊது காமாலை" என்று சொல்லுவதுண்டு. நல்ல இரத்தம் காரணமாக ஆள் புஷ்டியாக இருந்தால், அது சிறந்த ஆரோக்கியத்தின் சின்னமாகும். ஆனால், நல்ல இரத்தமின்றி உடம்பு ஊதியிருந்தால் அது ஆரோக்கியமாகுமா? ஆகாது; அதற்கு மாறாக, அத்தகைய நிலைமை நோயின் சின்னமாகும்.

இன்று இந்தியாவின் பொருளாதார நிலைமையும் அத்தகையதாகவே இருக்கிறது. அதிக விலைவாசிகளும் அதிக பணப் புழக்கமும் ஒரு தேசத்தின் செல்வச் செழுமையையே குறிக்கும். ஆனால், இப்போது நம் நாட்டில் விலைவாசிகள் பிரமாதமாக உயர்ந்திருக்கின்றன. பணப் புழக்கமோ சொல்லவேண்டியதில்லை. 1939-ம் வருஷம் சுமார் நூற்றெண்பது கோடி ரூபாய் கரன்ஸி நோட்டுகள் புழக்கத்திலிருந்தன. இன்றோ ஆயிரம் கோடி ரூபாய்க்குமேல் கரன்ஸி நோட்டுகள் செலாவணியில் இருந்து வருகின்றன. எனினும் இதைப் பொருளாதார சுபிட்சம் என்று சொல்ல முடியாது. இத்தகைய நிலைமை பொருளாதார ஊதுகாமாலையேயாகும். எல்லை மீறிக் காகிதப் பணம் செலாவணியிலிருப்பதே விலைவாசிகளின் உயர்வுக்குக் காரணம். இந்நிலைமையில் மென்மேலும் விலைகள் உயர்ந்தால் என்ன செய்வது? அவ்வாறு உயர்ந்து பொருளாதார நிலைமை அடியோடு சீர்குலையாமல் தடுக்க வேண்டியது சர்க்காரின் இன்றியமையாத கடமையல்லவா? அதனால்தான் அரிசி விலையை உயர்த்த முடியாதென்று இந்திய சர்க்கார் கண்டிப்பாக அறிவித்து விட்டனர்.

அரிசி விலையை உயர்த்தினால் மற்றப் பொருள்களின் விலை உயர்ந்துவிடும். பின்னர் அதிகச் சம்பளம் வேண்டுமென்ற கோரிக்கை எழும். எனவே, அரிசி விலையை உயர்த்துவது, ஒரு சிக்கலைத் தீர்க்கப் போய் ஒன்பது சிக்கல்களைச் சிருஷ்டித்துக் கொண்டதாக முடியுமென்று இந்திய சர்க்கார் இடைவிடாது கூறி வருகின்றனர். அப்படியிருந்தும், பலர் இந்திய சர்க்கார் மீது குறை கூறுகிறார்கள். அவ்விதம் குறை கூறுவது முற்றிலும் தவறென்பதை நமது உணவு மந்திரி டாக்டர் ராஜன் சென்னை சட்டசபையில் புள்ளி விவரங்களுடன் எடுத்துக் காட்டியிருக்கிறார். இந்திய சர்க்கார் அதிக விலை கொடுத்து அன்னிய நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை வாங்கி, குறிப்பிட்ட குறைந்த அளவு விலைக்கு ஜனங்களுக்குக் கொடுப்பதற்காக, நூறு கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறார்களெனில், ஜனங்களின் க்ஷேமத்தில் இந்திய சர்க்காருக்குச் சிரத்தை இல்லையென்று எவராவது கூற முடியுமா?

நெல் உற்பத்தியாளர்களுக்கு போனஸ் கொடுப்பதன் காரணமாக, சென்னை சர்க்காருக்குக் கோடிக் கணக்கில் செலவு ஏற்பட்டிருக்கிறது. ஜனங்களுக்கு உருளைக் கிழங்கு குறைந்த விலைக்குக் கிடைப்பதற்காகவும் சென்னை சர்க்கார் இரண்டு மாத காலத்துக்குள் ஆறரை லட்சம் ரூபாய் செலவு செய்திருக்கிறார்கள்.

## தியாக புத்தி வேண்டும்

ஆனால், இந்த உண்மையையெல்லாம் அறிந்து கொள்ளாமலோ, அறிந்து கொண்டும் சுயநலம் காரணமாகவோ, அல்லது அரசியல் கட்சிப் பித்தலாட்டம் காரணமாகவோ சர்க்கார் மீது புகார் கூறுவோரைக் கண்டு பொது ஜனங்கள் ஏமாந்து போகக் கூடாது. சர்க்கார் யந்திரம் சிக்கலின்றி ஓட வேண்டுமாயின், அதற்குப் பொது ஜனங்களின் ஒத்துழைப்பாகிற எண்ணெய் அத்தியாவசியமாகும். அதிலும், உணவு நெருக்கடியைச் சமாளிக்கும் விஷயத்தில் பொதுவாகச் சகலரும், குறிப்பாக நெல் உற்பத்தியாளர்களும் தியாக புத்தி

யுடன் சர்க்காரோடு ஒத்துழைக்க வேண்டும். நெருக்கடி ஓரளவாவது தீர அதுதான் வழி.

## வீர முழக்கம்

ஸ்ரீமதி விஜயலக்ஷ்மியின் வீர முழக்கம் மீண்டும் சர்வ தேச அரங்கத்தைக் கிடுகிடுக்கச் செய்திருக்கிறது. ஐக்கிய நாடுகள் சபையின் அமைப்பைச் சீர்திருத்த வேண்டுமென்று அமெரிக்கா செய்துவரும் முயற்சிக்கு ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி சரியான சூடு கொடுத்திருக்கிறார். "சீர்திருத்த வேண்டியது ஐ. நா. சபையின் அமைப்பையல்ல, உங்களுடைய மனோ நிலையைத்தான்!" என்று அவர் சென்ற வாரம் நிகழ்ந்த ஐ. நா. மகா சபைக் கூட்டத்தில் பட்டவர்த்தனமாகக் குறிப்பிட்டிருக்கிறார். "உலக அமைதிக்கு உற்ற கருவியான ஐ. நா. ஸ்தாபனத்தை உங்கள் சுயநலம் காரணமாக ஏன் இவ்விதம் குட்டிச்சுவராக்குகின்றீர்கள்?" என்று அவர் கேட்ட கேள்வியைக் கண்டு வல்லரசுகளின் பிரதிநிதிகள் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பார்கள் என்பது நிச்சயம்.

ஐ. நா. சபை அமைப்பில் எவ்விதக் கோளாறும் இல்லையென்பதை ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி தெளிவுபடுத்தியிருப்பதுடன், இந்தியாவின் நிலைமை என்னவென்பதையும் சந்தேகமின்றி விளக்கியிருக்கிறார். "எந்த வல்லரசுடன் சேர்ந்து கொண்டால் தனக்கு லாபம் என்ற நோக்கம் இந்தியாவுக்கு இல்லை. எந்த விஷயத்தையும், அதன் நியாய அநியாயத்தைப் பரிசீலனை செய்தே இந்தியா அதை ஆதரிக்கவோ அல்லது கண்டிக்கவோ செய்யும்" என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார். சுயநலமும் கட்சி மாத்சரியமும் மலிந்துள்ள சர்வதேச மேடையில் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் மேற்கூறிய விதம் இந்தியாவின் பாரபட்சமற்ற தன்மையை எடுத்துக் கூறியது, உலக நாடுகளின் முன்னிலையில் இந்தியாவின் கௌரவத்தை அதிகப்படுத்தியிருக்கிறது என்பதில் சந்தேகமென்ன?

## சிறுகதைப் போட்டி

பல தமிழன்பர்களின் வேண்டுகோளின் படி நமது சிறுகதைப் போட்டியின் முடிவு தேதியை அக்டோபர் மாதம் 31-ந் தேதியாக மாற்றியிருக்கிறோம். சிறுகதை எழுதும் மற்றும் பல அன்பர்கள் இந்த அவகாசத்தை நன்றாகப் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று எண்ணுகிறோம்.

## மனிதன் குடிக்கிறான்!













மாடு குடிக்கவில்லை, கழுதை குடிக்கவில்லை, நாய், பன்றி கூடக் குடிக்கவில்லை; ஆனால், மனிதன் ஏமாறுகிறான்!

# வீழ்ந்தான் அரக்கன்!

ஜகதாச்சாரியனான கண்ணன் ஒரு நரகாசுரனை வதம் செய்தார்.

கண்ணன் காட்டிய வழியை உபதேசித்த ஆச்சாரியனோ, நரகாசுரனுடைய அண்ணனான மற்றொரு மகா கொடிய அரக்கனை வதம் செய்யும் வழியைக் காட்டி விட்டார்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினால் வதை யுண்ட நரகாசுரனையோ, அல்லது அவனுடைய திருவிளையாடல்களையோ நம்மில் எவரும் நேரில் கண்டதில்லை.

இருந்தாலும், மற்ற அரக்கர்களைப் போலவே நரகாசுரனும் ஜனங்களை ஹிம்சித்தான்; யாகங்களை அழித்தான்; தர்ம தேவதைமீது போர் தொடுத்தான் என்று சொல்லப்படுகிறது.

ஆனால், அரக்கர்களுக் கெல்லாம் அரக்கனான மது அரக்கன் செய்யும் மாயா ஜால வேலைகளோ, அவற்றையெல்லாம் காட்டிலும் மகா பயங்கரமாக இருக்கின்றன.

விஷமயமான ஸர்ப்பத்தின் தலையில் அபூர்வ ரத்னம் ஒளிந்து கொண்டிருப்பது போல், அமிருதம் போன்ற இளநீரைக் கொடுக்கும் விருக்ஷத்தின் தலையில் இந்த மாய அரக்கன் ஒளிந்து கொண்டு உலகத்தையே ஆட்டி வைக்கிறான்; உலகத்தை ஆடவும் வைக்கிறான்.

மரத்தின் உச்சியிலே வாழும் அவன் மனிதனின் வயிற்றுக்குள்ளே பிரவேசித்து விட்டால், மனிதன் மதியிழந்து ஆடுகிறான்; தள்ளாடுகிறான்; அவன் கண்முன் உலகமும் கூத்தாடுகின்றது!

அந்த அரக்கனால் ஆட்கொள்ளப் பட்ட அபாக்கியசாலிகள் அறிவிழந்து, ஆரோக்கிய மிழந்து, நடைப் பிணங்களாகி, நரக வாழ்க்கை நடத்தும் நிலைக்கு வந்து விடுகிறார்கள்.

இத்தகைய மாய சக்தி வேறெந்த அரக்கனுக்கும் இருந்ததில்லை!

வாதாபி என்ற அரக்கன்கூட வெகு தந்திரமாக மனிதரின் வயிற்றுக்குள் சென்று வயிற்றைக் கிழித்து அவர்களைக் கொன்று விடுவானாம். அவனால் கூட ஒரே சமயத்தில் ஒருவரைத் தான் கொல்ல முடிந்தது.

இந்த மது அரக்கனோ, ஏககாலத்தில் கோடிக் கணக்கான மக்களின் உடம்பிலுள்ள சக்தியையும் மண்டையிலுள்ள புத்தியையும் பிழிந்தெடுக்கும் வல்லமை பெற்றிருக்கிறான்.

வறுமை, பிணி முதலியவைகூட மனிதனின் மாண்பைக் கெடுப்பதில்லை; அவனுடைய ஆத்மாவை அழிப்பதில்லை.

ஆனால், குடிவகைகளோ வெனில் அவன் உய்ய முடியாதவாறு அவனைப் பாதாளத்தில் கொண்டு போய் அழுத்தி விடுகின்றன.

கொலை, களவு போன்ற கொடிய பாதகங்களுக் கெல்லாம் குடி தந்தையெனில், அதன் 'மகிமை' யைக் குறித்து அதிகம் சொல்லத் தேவையில்லை.

* * *

கோடிக் கணக்கான குடும்பங்களுக்குச் சாபக்கேடாக அமைந்த மதுவை ஒழிப்பதற்காக அமெரிக்கா முதலிய நாடுகள் எவ்வளவோ முயற்சி செய்தும் இறுதியில் அம்முயற்சி தோல்வியடைந்து விட்டது.

அமெரிக்காவில் மதுவிலக்குப் பிரசாரம் செய்தவர்கள் பைத்தியக்காரர்களாகவும் கருதப்பட்டனர்!

மற்றும் பல நாடுகள், மிகவும் நாசகரமான குடி வழக்கத்தைக் கட்டுப் படுத்தவும் முடியாது தவிக்கின்றன. அதன் விளைவாக, திருட்டுத்தனமாக லாகிரி வஸ்துக்களை விற்பது அகில உலகமும் வியாபித்த ஒரு சர்வதேச வியாபாரமாகி விட்டது.

சீனா, அதனுடைய பழம் பெருமையை இழந்து இன்றுள்ள துர்ப்பாக்கிய நிலைமைக்கு வந்திருப்பதற்கு, அபின் குடிவழக்கமே காரணமென்பது சரித்திரப் பிரசித்தமான விஷயம்.

ஜனங்களின் ஆத்மார்த்த வாழ்வை மாத்திரமின்றி, ஸ்தூல வாழ்வையும் கெடுக்கும் குடி வகைகளைத் தடுக்க உலக நாடுகளுக்கு மனமும் இல்லை, சக்தியும் இல்லை!

ஆனால், பாரத நாட்டின் நிலைமையோ முற்றிலும் வேறாகும்.

சுதந்திரம் இழந்திருந்ததன் காரணமாக இந்தியா இரண்டு பீடைகளால் ஆட்கொள்ளப் பட்டிருந்தது.

அவற்றில் ஒன்று இராணுவச் செலவு, மற்றொன்று கலால் வருமானமாகும்.

ஒன்று பாரத நாட்டின் பொருளாதார நிலையைச் சீர்குலைத்தது. மற்றொன்று இந்திய மக்களின், குறிப்பாக ஏழைகளின் வாழ்வையே அதோகதியாக்கி விட்டது.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி இருந்த வரையில் இராணுவச் செலவு குறையவும், கலால் வருமானம் ஒழியவும் வழி பிறக்கவில்லை.

இராணுவச் செலவைக் குறைத்தால் அன்னியரின் படையெடுப்பிலிருந்து இந்தியாவைப் பாதுகாக்க முடியாமற் போய்விடும் என்றார்கள்; கலால் வருமானம் போய்விட்டால், அரசாங்கம் பாப்பராகிவிட நேரும் என்று பிரலாபித்தார்கள்.

எனினும், காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டபின் முதன் முதலாகக் காங்கிரஸ் மந்திரிகள் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வருவதில் கவனம் செலுத்தலாயினர்.

* * *

அவ்விஷயமாக மற்ற மாகாணங்களுக் கெல்லாம் வழி காட்டிய பெருமை, 1937-ம் வருஷம் ராஜாஜியைப் பிரதம மந்திரியாக அடையும் பாக்கியம் பெற்ற சென்னை மாகாணத்துக்கே உரியதாகும்.

அப்போது சென்னை சர்க்கார் பிரதம மந்திரியாக இருந்த ராஜாஜி, சேலத்தில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வந்தார்.

பிறகு மற்றும் சில ஜில்லாக்களிலும் மதுவிலக்கு அமுலுக்கு வந்தது.

அவ்வளவுதான்; அதிலிருந்து மூன்று மாத காலத்துக்குள் லட்சக் கணக்கானவர்களின் வாழ்க்கையில் ஆச்சரியகரமான மாறுதல் ஏற்பட்டுவிட்டது.

நேரில் சென்று அந்த ஆச்சரியகரமான மாறுதலை ஆதார பூர்வமாகவும் புள்ளி விவரங்களுடனும் ஆராய்ச்சி செய்வதற்காக, சிதம்பரம் அண்ணாமலை சர்வகலாசாலை நிர்வாகிகள் அனுப்பியிருந்த நிபுணரின் அறிக்கை, மதுவிலக்கினால் ஜனங்களுக்கு ஏற்படும் க்ஷேமத்தை இந்தியா முழுதும் அறிந்து கொள்ளும்படி செய்தது.

குடிவழக்கத்துக்கு இரையாகி, உய்ய வகையறியாது தவித்துக் கொண்டிருந்த லட்சக்கணக்கான ஜனங்களின் ஒழுக்கமும் பொருளாதார நிலைமையும் மூன்றே மாதத்துக்குள் அபிவிருத்தியடைய ஆரம்பித்து விட்டன.

அதன் பயனாக ஏழை மக்களிடையே பணப் புழக்கம் அதிகமாகியது; குற்றங்கள் குறைந்தன. அவர்களின் தினசரி நிகழ்ச்சிகளாக இருந்த சண்டை போட்டுக் கொண்டு மண்டையை உடைத்துக் கொள்ளும் விபரீதமும் ஒழிய ஆரம்பித்தது. ஏழை மக்கள் உணவுக்கும் உடைக்கும் அதிகப் பணம் செலவு செய்வது சாத்தியமாயிற்று. பெண்களின் முகத்திலும் குழந்தைகளின் முகத்திலும் அதுவரையில் காண முடியாத புன்முறுவலைப் பார்க்க முடிந்தது.

மில் முதலாளிகளும் மதுவிலக்கு தொழிலாளர்களுக்கு மாத்திரமல்ல, தங்களுக்கும்கூட ஒரு வரப்பிரசாதமென்று ஆனந்த மடைந்தனர்!

ஏனெனில், அதற்குமுன் தொழிலாளர்கள் வேலைக்கு நேரங் கடந்து வருவதும் வராமலே இருந்து விடுவதும் சகஜமாக இருந்தன. ஆனால், கள்ளுக் கடைகள் ஒழிந்ததிலிருந்து தொழிலாளர்களுடைய ஆரோக்கியம் அபிவிருத்தி யடைந்ததால், அவர்கள் வேலையிலும் உற்சாகம் கொண்டு ஒழுங்காக வரத் தொடங்கினர்.

ஆனால், துரதிர்ஷ்டவசமாக வேதாளம் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.

1939-ம் ஆண்டு யுத்தம் ஆரம்பமாகியதால் காங்கிரஸ் மந்திரிகள் ராஜிநாமாச் செய்தனர். மீண்டும் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டது. அந்த ஆட்சியுடன் அதற்கு உதவியாகக் கள்ளரக்கனின் ஆட்சியும் ஏற்பட்டு விட்டது.

* * *

இனி அத்தகைய விபரீதம் எதுவும் நேராதென்பது நிச்சயம்.

இந்தியா பூரண சுதந்திரம் பெற்று தேச பக்தர்களின் ஆட்சி அமைந்து விட்டது. இந்த ஆட்சியை இனி எந்த சக்தியினாலும் அசைக்க முடியாது.

எனவே, இராணுவச் செலவு குறைந்துதான் தீர வேண்டும்; கலால் வருமானமும் ஒழிந்தேயாகவேண்டும்.

கோடிக் கணக்கான ஏழைக் குடும்பங்கள் இரத்தக் கண்ணீர் விடும்படி செய்யும் கலால் வருமானத்தை ஒழித்து விடுவதென்று சென்னை சர்க்கார் திடசங்கல்பம் கொண்டுள்ளனர்.

உணவும் உடையும் அபரிமிதமாகக் கிடைத்த காலத்திலேயே குடி மகா கொடியதெனில், உணவுக்கும் உடைக்கும் பஞ்சம் ஏற்பட்டுள்ள இக்காலத்தில் அதன் கொடுமை எத்தகையதென்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

எனவே, 1946-ம் வருஷத்தைப் போலவே இவ் வருஷத்திலும் அக்டோபர் மாதம் முதல் தேதி யன்று சென்னை சர்க்கார் மேற் கொண்டு எட்டு ஜில்லாக்களில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வருகின்றனர்.

மீதியுள்ள எட்டு ஜில்லாக்களிலும் அடுத்த வருஷம் அக்டோபர் 1-ந் தேதி மதுவிலக்கு அமுலுக்கு வந்து விடும்.

ஆகையால், சென்னை மாகாண மகா ஜனங்கள் சர்க்காருடன் ஒத்துழைத்து, அவர்களுடைய புனித முயற்சி பூரண வெற்றி பெற உதவி புரிவார்களென்று எதிர்பார்க்கிறோம்.

மதுவிலக்கை வெற்றிகரமாக அமுலுக்குக் கொண்டு வருவதில், சென்னை மாகாணம் இந்தியாவின் மற்ற மாகாணங்களுக்கு வழிகாட்டி யிருக்கிறது: இந்தியா உலகத்துக்கே வழிகாட்டப் போகிறது.

இவ்வாறாக இந்த மாகாணத்துக்குப் புகழையும் பெருமையையும் தேடிக் கொடுத்துள்ள சென்னை மந்திரி சபையை வாழ்த்துகிறோம்.

## நாதசுரக்காரர் தடுமாறுகிறார்!



எட்டயபுரம்
பாரதியார் மண்டப நிதிக்காக
ஸிவில் ஸப்ளைஸ் ரிக்ரியேஷன் சங்கத்தார்
நடிக்கும்

# மைதிலி

ஆனந்த விகடன் 'தேவன்' எழுதிய நாடகம்
கல்வி மந்திரி கனம் ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார்
அவர்கள் முன்னிலையில்
5 - 10 - 47 ஞாயிறு மாலை 6 - மணிக்கு
மயிலை ரஸிக ரஞ்சனி சபா ஹாலில்

# ஹோமியோபதி

வைத்தியம் சாலச் சிறந்ததது. இதைத் தமிழில் தபால் மூலம் தங்கள் வீட்டிலிருந்தே படித்துத் தேர்ச்சி பெற்று நீங்கள் டாக்டராகலாம். முழு விபரங்கள் அடங்கிய இலவசப் பிரகடனத்திற்கு எழுதவும்.

தென் இந்தியாவின் பிரதான ஹோமியோபதி ஸ்தாபனம்:

விலாசம்:—
இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிட்யூட்
(1939 - ல் ஸ்தாபிதம்)
கும்பகோணம்

GOVERNOR OF WEST BENGAL



**GOVERNMENT HOUSE.**

Calcutta,
21st September, 1947.

பிரியமுள்ள

உங்களுடைய செப்டம்பர் 16உ கடிதம் கிடைத்தது. மதுவிலக்குக்கு என்னிடமிருந்து விசேஷச் செய்தி எதற்காக? அதன் பொறுப்பு முழுவதும் சென்னை சர்க்காருடையதல்லவா?

இந்த நாளில் சில வகுப்பாரிடையே பணம் அதிகமாகப் புழங்கிக் கொண்டிருக்கிறது. இது காரணமாக ஜனங்களிடம் உள்ள தீய வழக்கங்களைச் சர்க்கார் கட்டுப்படுத்துவது மிகவும் கஷ்டமாகி விட்டது. அத்துடன், 1937-ம் வருஷத்தில் ஆரம்பித்த மதுவிலக்கை நடுவில் நிறுத்தி நெடுங்காலம் சும்மா இருந்துவிட்டதினால், திருட்டுக் கள்-சாராயம் விற்பவர்களுக்கு வசதியாகப் போய் விட்டது. திருட்டுக் கள்-சாராயம் விற்பனை செய்வதற்கு அவர்கள் நிறைய உபாயங்களைக் கண்டுபிடித்து வைத்திருக்கிறார்கள். இதெல்லாம் சென்னை மாகாணத்தில் மதுவிலக்குச் சட்டத்தை அமுல் நடத்துவது மிகவும் கஷ்டமாகியிருப்பதை நான் உணர்ந்திருக்கிறேன். இத்தகைய சூழ்நிலையில் சென்னை மந்திரிசபை தீரத்துடன் மதுவிலக்குத் திட்டம் கொண்டு வருகிறார்கள்.

குடி மிகப் பொல்லாதது. ஏழைகளுக்கோ அது கொடிய சத்ரு. குடியை ஒழிப்பது போல மக்களுக்கு நன்மையான காரியம் வேறு ஒன்றுமில்லை. எனவே, சென்னை சர்க்காரின் மதுவிலக்குத் திட்டம் பூரண வெற்றிபெற வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

அன்புள்ள

[signature]



O.P. RAMASWAMI REDDIAR




DATED 22-9-'47

சென்ற வருடம் நம் மாகாணத்தில் எட்டு ஜில்லாக்களில் மதுவிலக்கு அமுலில் இருந்து வந்தது. இவ்வருடம் மலையாளம், தென்கன்னடம், நீலகிரி, தஞ்சை, திருச்சிராப்பள்ளி, மதுரை குண்டூர், நெல்லூர் ஆகிய எட்டு ஜில்லாக்களில் அக்டோபர் 1ந் தேதி அமுலுக்கு வருகிறது.

மதுபானத்தினால் மனிதன் அறிவை இழந்து, செயலிழந்து, அரிய மானத்தையும் இழந்து பஞ்சமா பாதகங்களுக்கும் ஆளாகி, ஒழுக்கங் கெட்டு, தன்மையும் பற்றும், தேசத்திற்கும் இழுக்கும் கேட்டிலிருந்து மீட்க, அரசாங்கம் செய்யும் இப்புனிதமான தொண்டிற்கு தேசத்திலுள்ள எல்லோரும் சிரத்தை எடுத்துக் கொண்டு, இச்சீர்திருத்தம் பயன்படும் நிலைமையை உண்டாக்க வேண்டுமென்று நம் மாகாண மக்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஓ.பி. ராமசாமி
22/9/47




Dr. T.S.S. Rajan

The Lodge, Govt. House,
Mount Road, 21st Septr. 47.



அன்புள்ள திருவண்ணாமூர்த்தி,

விமோசனம் கைகூடி வருகிறது. நானும் நண்பர் பக்தவத்ஸல
மும் திருச்சி ஜில்லாவில மதுவிலக்குப் புனித யாத்திரை அக்டோபர் மாதம்
முதல் தேதி ஆரம்பிக்கிறோம். எனது முதல் சிறைவாசம் 1921-ம் வருஷத்தில்
திருச்சியில் மதுவிலக்குப் பிரசாரத்தினால் ஏற்பட்டது. என்னைப்போல் ஆயிரக்
கணக்கான தமிழ்நாட்டுத் தொண்டர்கள் கள்ளுக்கடை மறியலில் சிறை
புகுந்தார்கள். மகான் ராஜாஜி தொடங்கிய மதுவிலக்கு இயக்கம்
இப்போது வெற்றியுடன் பரவி வருகிறது. தமிழ்நாட்டில் அன்னிய
ஆட்சியிலிருந்து தேசம் விடுதல் அடைந்ததுபோல், கள்ளரக்கன் கொடுமையி
லிருந்தும் நாடு விடுதல் அடைந்து வருகிறது. ராஜாஜியின் ஆசியும்
தொண்டர்களின் திருப்பணியும் பயன் அளிக்கும் என்பதில் சந்தேகமில்லை.

தி. சே. சௌ. ராஜன்.



# பாரதி திருவிழா

பாரதி மண்டபத் திறப்பு விழாவுக்கு இன்னும் சில தினங்களேதான் இருக்கின்றன. ஏற்பாடுகள் பலவும் நன்கு நடந்து வருகின்றன. அனைவரும் ஒத்துழைத்து வருகிறார்கள். எட்டயபுரத்துக்கு நாலு புறத்திலிருந்தும் வரும் சாலைகளைச் செப்பனிட மராமத்து இலாக்கா மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள் உத்தரவிட்டிருக்கிறார்கள். அந்தச் சாலைகளில் திருவிழா தினத்தில் அதிகமான பஸ்ஸுகள் விடக் கனம் டேனியல் தாமஸ் அவர்கள் ஏற்பாடு செய்கிறார்கள். விழாவுக்கு வருகிறவர்கள் அவரவர்களும் தங்கள் ரேஷனை எடுத்து வரலாமென்று திருநெல்வேலி ஜில்லா கலெக்டர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார். ஒரு சில விருந்தினருக்கு மட்டும் வரவேற்புக் கமிட்டியார் உணவளிக்க உணவு மந்திரி டாக்டர் ராஜன் அவர்கள் அனுமதி தந்திருக்கிறார்கள். மண்டபத் திறப்பு விழாவன்று மகாகவியின் திருமுக உருவச் சிலையைத் திறந்து வைக்கப் பிரதம மந்திரி அன்புடன் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். சென்னையிலிருந்து 11உ இரவு ஸ்பெஷல் ரயில் விட ரயில்வே அதிகாரிகள் இசைந்திருக்கிறார்கள். வரப்போகும் மாகாண கவர்னர்களுக்குத் தமது ஸ்பெஷல் ஸலூனைக் கொடுக்கச் சென்னை கவர்னர் அவர்கள் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

•  •  •

“எல்லாருடைய ஒத்துழைப்பும் இருக்கிறது; ஸ்ரீமான் ரூபாய் அணா பைசாவின் ஒத்துழைப்புத்தான் இன்னும் தக்கபடி கிடைக்கவில்லை!” என்று வரவேற்புக் கமிட்டியார் புகார் செய்கின்றனர். “எல்லாம் கிடைக்கும்; அக்டோபர் பிறந்ததும் பாருங்கள்!” என்று நான் சொல்லி வருகிறேன்.

வரவேற்புக் கமிட்டிக்கு ரூபாய் நூறு கொடுப்பவர்களுக்கு “விசேஷப் பார்வையாளர்” என்ற பெயர் கொடுத்து மேடையில் இடமும் கொடுக்க ஒரு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். “பாரதியார் விழாவில் எதற்காக இந்தப் பண வித்தியாசம்?” என்று கேட்டேன். “பணம் உள்ளவர்களிடம் நூறு ரூபாய் வாங்கிப் பணத்தின் வித்தியாசத்தை அந்த அளவில் குறைக்கிறோம்!” என்று பதில் வந்தது. “காரியமும் நடக்க வேண்டியிருக்கிறதல்லவா?” என்ற கேள்வியும் கூட வந்தது. விழாவில் விசேஷ பார்வையாளராக வீற்றிருக்க விரும்புவோர் நூறு ரூபாய் அனுப்பித் தங்கள் பண வித்தியாசத்தைக் கொஞ்சம் குறைத்துக் கொள்வார்களாக!

•  •  •

தமிழ் நாட்டில் பல ஊர்கள் பாரதி நிதிக்குப் பணம் வசூலித்துத் தருவதில் விசேஷ உற்சாகம் காட்டியிருக்கின்றன. ஆனால் சென்னை நகரம் மட்டும் இதுவரையில் ஒரு மாதிரியாக ஏனோதானோ என்று இருந்து வந்தது. “பாரதியாரைத் தகனம் செய்த மாநகரம் நான் இருக்கும்போது, பட்டிக்காட்டு எட்டயபுரத்திலே பாரதி மண்டபமாம்! அதற்கு ஒரு திருவிழாவாம்!” என்று சென்னை கோபித்துக் கொண்டிருந்தது போலத் தோன்றியது. அல்லது “நான் தமிழருக்குச் சொந்தமா, ஆந்திரரின் உடைமையா என்பது முதலில் தீரட்டும்! அப்புறம் பார்க்கலாம்!” என்று தான் சும்மா இருந்ததோ என்னமோ? எனினும் இந்தக் குறையைத் தீர்ப்பதற்குச் சிவில் சப்ளைஸ் இலாகா உத்தியோகஸ்தர்கள் சிலர் முன் வந்து நமது கனம் கல்வி மந்திரி அவர்களின் முன்னிலையில், தேவன் எழுதிய “மைதிலி” என்னும் நாடகத்தை நடத்துகிறார்கள். அக்டோபர் 5உ ரஸிக ரஞ்சனி சபையில் நாடகம் நடைபெறுகிறது. சென்னைப் பாரதி அன்பர்கள் திரள் திரளாகச் சென்று ரஸிக ரஞ்சனி சபையில் இட நெருக்கடி உண்டு பண்ணிப் பாரதியின் கைங்கரியத்தில் பங்கு பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

•  •  •

திருச்சி “சிவாஜி” ஆசிரியர் ஸ்ரீ திரிலோக சீதாராம் ஒரு அருமையான தொண்டு செய்து வருகிறார். பாரதியார் பாடல்களையெல்லாம் புத்தகமில்லாமலே கடல்மடை திறந்ததுபோல் உணர்ச்சியுடன்

பாடக்கூடிய தமது சக்தியைப் பாரதிமண்டபத் திருப்பணிக்கு உபயோகப்படுத்தி வருகிறார். திருச்சியில் "ஜுவாலை" என்னும் அருமையான கையெழுத்துப் பத்திரிகையையும் இன்னும் பல கலைத் தொண்டுகளையும் நடத்தி வரும் ஜுவாலை கலைக்கழகத்தாரின் ஒத்துழைப்பின் பேரில் மேற்படி கவிதைக் கச்சேரி நடத்தியதில் கிடைத்த ரூ. 222—0—0 வந்திருக்கிறது. பாரதியார் பாஷையில், "பலே பாண்டியா!" என்று சொல்லத் தோன்றுகிறது. வேறு என்னத்தைச் சொல்வது?

கும்பகோணத்தில் பாரதி மண்டப விழாவுக்குப் பணம் திரட்டிக் கொடுக்கச் சில அன்பர்கள் முயற்சி தொடங்கியிருக்கிறார்கள். கும்பகோணத்தில் இந்தக் காரியம் வெற்றியுடன் நடந்தால் சோழநாடே சிறப்படைந்த மாதிரிதான்.

• • •

கடைசியாக, இன்னும் ஒரு முக்கியமான விஷயம். பாரதி நூல்களைப் பதிப்பிக்கும் உரிமையுடையவர்களான பாரதி பிரசுராலயத்தார் பெரிய மனது செய்து, பாரதி மண்டபத் திறப்பு விழாவை யொட்டி, பாரதியாரின் பதினாறு பாடல்களை அச்சிட்டு ஞாபகார்த்தப் பதிப்பு வெளியிட அநுமதி தந்திருக்கிறார்கள். உயர்ந்த ஆர்ட் காகிதத்தில் சித்திர விசித்திர வர்ண அலங்காரங்களுடன் மேற்படி பாடல்களை இணையற்ற சௌந்தரிய வடிவமாக வெளியிட ஏற்பாடு நடந்து வருகிறது. புத்தகத்தின் விலை ரூபாய் மூன்று. இந்தப் புத்தக விற்பனையில் கிடைக்கும் லாபம் அவ்வளவும் பாரதி மண்டப நிதிக்காவது திருவிழா நிதிக்காவது கொடுத்துவிடப்படும். கால நிலையையும் காகித நிலையையும் ஒட்டிச் சொற்பப் பிரதிகள்தான் அச்சிடப்படுகின்றன. "கல்கி" காரியாலயத்திலாவது, "கல்கி" ஏஜெண்டுகளிடமாவது முன் பணம் கொடுத்துப் பிரதியை உறுதிசெய்து கொள்வது நல்லது. தபால் மூலம் பெற விரும்புவோர் ரூ. 3—8—0 "கல்கி" காரியாலயத்துக்கு அனுப்ப வேணும்.

## பாரதி மண்டப நிதி

| | | | |
|---|---|---|---|
| ஜுவாலை கலைக் கழகம், திருச்சி ('சிவாஜி' ஆசிரியர் திரிலோக சீதாராம் கவிப்பொழிவு வசூல்) | 222 | 0 | 0 |
| ஸ்ரீ கே. வி. ஏ. எல். ராமநாதன் செட்டியார், கோட்டையூர் | 201 | 0 | 0 |
| ஸ்ரீ வ. செ. சிவலிங்கஞ் செட்டியார், பூவாங்குறிச்சி | 201 | 0 | 0 |
| ராவ்பகதூர் ஏ. ஒய். அருணானந்தசாமி நாடார், தஞ்சாவூர் | 100 | 0 | 0 |
| கண்டனூர் துறையூர் அன்பர்கள் (ஸ்ரீ திரிலோக சீதாராம் மூலம்) | 98 | 0 | 0 |
| தமிழ் மாணவர் கழகம், பழனி (ஸ்ரீ ராமையா மூலம்) | 75 | 0 | 0 |
| லக்ஷ்மி நாயக்கன் பாளையம் ஸ்ரீ ராமசாமி நாயுடு வித்யாலயம் (தமிழ் ஆசிரியர் ஸ்ரீ வி. கோவிந்தராஜுலு மூலம்) | 55 | 5 | 0 |
| ஸ்ரீ க. சோ. ஆதப்பன், பிறங்கு | 50 | 0 | 0 |
| கால்நடை மருத்துவக் கல்லூரி மாணவர்கள், சென்னை (ஸ்ரீ ச. உலகநாதன் மூலம்) | 49 | 10 | 0 |
| ஸ்ரீ ஆர். தனுஷ்கோடி ராஜா, கல்கி ஏஜெண்ட், இராஜபாளையம் | 42 | 14 | 0 |
| கோட்டகிரி, போர்டு ஹைஸ்கூல் முதல் பாரம்—ஆறும் பாரம் மாணவர்கள், ஆசிரியர்கள் | 41 | 7 | 0 |
| மதுரை டவுன், மணி நகரம், எட்டயபுரம் நடுவிற்பட்டி அன்பர்கள் (ஸ்ரீ வே. கந்தசாமிப் பிள்ளை மூலம்) | 30 | 0 | 0 |
| ஸ்ரீ கே. கோபாலன், மதுரை | 25 | 0 | 0 |
| மெஸர்ஸ் எஸ். ஏ. ராமசாமி அண்டு பிரதர்ஸ், சென்னை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. பி. நாராயணன், தலைவர், டவுன் காங்கிரஸ் கமிட்டி, அருப்புக்கோட்டை | 20 | 0 | 0 |
| ஸ்ரீ வி. வி. செல்லப்பய்யர், கோயமுத்தூர் | 15 | 0 | 0 |
| வேலூர் பொதுமக்கள் (ராஜாஜி சேவா சங்கம் மூலம்) | 12 | 4 | 0 |
| உசிலம்பட்டி போர்டு உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் (ஸ்ரீ கே. சக்திவேல் மூலம்) | 11 | 0 | 0 |
| "அன்பு மலர்", "சூரியோதயம்", "உரிமை", "கலைக் கோயில்", "கஸ்தூரி மலர்"— கையெழுத்துப் பத்திரிகை எழுத்தாளர் சங்கம், திருப்பூர் | 10 | 8 | 0 |
| ஸ்ரீமதி ரமாமணி, ஈரோடு | 10 | 0 | 0 |
| அரவங்காடு ஹிந்தி மாணவர்கள் | 10 | 0 | 0 |
| மெஸர்ஸ் ராஜன் அண்டு ராஜன் கம்பெனி, திருப்பூர் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ கே. வேம்பு, மருளிப்பட்டணம் | 6 | 0 | 0 |
| சேவாசதனம்—இரவு பாடசாலை நடராஜபுரம், வத்திராயிருப்பு (ஸ்ரீ கோபாலசாமி மூலம்) | 6 | 0 | 0 |
| ஸ்ரீ டி. வி. கைலாசம் அய்யர், எம். வி. டி. ஸ்கூல், புரசைவாக்கம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீமதி அலமேலு ராஜகோபால், அலஹாபாத் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ என். ஷண்முகம், சேலம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ தே. வ. ஜெயராமன், மாடர்ன் கபே, சென்னை | 5 | 0 | 0 |
| "உழவன்" கையெழுத்துப் பிரதி சங்கம், ஊஞ்சலூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீமதி ஆர். ஸ்ரீதேவி, சிதம்பரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். வி. பொன்னுசாமி அய்யர், லக்ஷ்மி கபே, திருவண்ணாமலை | 5 | 0 | 0 |
| ஸ்ரீமதி சரோஜினி ஜகந்நாதன், ஆல்வாய் | 5 | 0 | 0 |
| மதுரை குன்னத்தூர் காங்கிரஸ் கமிட்டி (ஸ்ரீ கே. ரங்கசாமி நாயுடு மூலம்) | 5 | 0 | 0 |
| ஆக ரூ. | 1372 | 0 | 0 |
| ஏற்கனவே வசூல் ரூ. | 24,900 | 12 | 0 |
| ஆக மொத்தம் ரூ. | 26,272 | 12 | 0 |

# கொண்டாட்டமும் திண்டாட்டமும்

1

கொஞ்சம் ருசி பார்க்கலாம் என்று
ஆரம்பமாகும் அற்ப சிநேகம் ....

2

....கள்ளர்களின் கொண்டாட்டத்திலும்
குடும்பத்தின் திண்டாட்டத்திலும் வந்து முடிகின்றது

ஹ ஹா,
ஹ ஹா,

© SHASTRY

# குடிகாரன் ஆனந்தம்!




...ஆனால், குடிகாரனே தானாகச் சென்று தூக்கில் தலையை மாட்டிக் கொள்கிறான்.

ஆஹா! இந்த ஆனந்தத்துக்கு ஈடேது?

# இரு நண்பர்கள்


இளமைப் பருவம்
1
குடிக்கு இரையானவன்.
குடியை வெறுத்தவன்.
வா, அப்பா ! இன்றைக்குச் செத்தால் நாளைக்கு இரண்டு நாள்!! இருக்கிற வரையில் குஷியாக இருக்க வேண்டாமா?
வேண்டவே வேண்டாம்!


அந்திய காலம்
2
குடிகாரனுக்கு எலும்புக் கூடும் உடைந்த சட்டியும்தான் பாக்கி.
குடியை வெறுத்தவனின் சுக வாழ்வு.

# தண்டனையும் அதன் ரத்தும்!




② 1940-ல் பிரிட்டிஷார் மது விலக்குச் சட்டத்தை ரத்து செய்து மது அரக்கனை விடுவித்து உதவிக்கு அழைத்தார்கள்.

நீதான் உற்ற நண்பன்! உன் உதவியின்றி இந்தப் பாழும் ஜனங்களை ஆளுவது எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது!

# சுபிட்ச உதயம்!







சென்னை காங்கிரஸ் சர்க்கார் மறுபடியும் மது விலக்கை அமுலுக்குக் கொண்டு வந்ததின் மூலம் மது அரக்கனின் மண்டையில் அடித்து நொறுக்கி,....

⑤

....''இனி நீங்கள் செல்ல வேண்டிய பாதை இது!'' என்று சுட்டிக் காட்டுகின்றனர்.

ஆரோக்கியம், செல்வம், சுபிட்சம்.

# முடியும்! நிச்சயம் முடியும்!!

சபாநாயகர் ஸ்ரீ ஜே. சிவஷண்முகம் பிள்ளை

**ம**காத்மா காந்தியின் உத்தரவினால், மதுவிலக்குத் திட்டத்தைக் காங்கிரஸ் அடிப்படையாக வைத்திருக்கிறது என்பதை உலகம் அறியும். காந்தி அடிகள், மதுவினால் ஏழைகள் தங்கள் செல்வத்தை இழந்து, துன்பத்துக் குள்ளாகிறார்கள் என்ற நல்லெண்ணத்தினால், நமது இந்தியா தேசம் பூரண சுதந்திரம் அடையும் நாளில் மதுவென்னும் அரக்கன் இங்கு தலை காட்டக் கூடாது என்று பல்வேறு மேடைகளில் பேசியிருப்பதை யாவரும் அறிந்திருப்பார்கள். 1937-ல் நமது மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரி சபை நடந்த போது, ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் மதுவிலக்குத் திட்டத்தை முதலில் சில ஜில்லாக்களில் அமுலுக்குக் கொண்டு வந்தார். காங்கிரஸ் மந்திரி சபை ராஜினாமா செய்த பிறகு கவர்னர் ஆட்சி நடந்ததல்லவா? அப்பொழுது, காங்கிரஸ் சர்க்கார் அமுலுக்குக் கொண்டுவந்த மதுவிலக்குத் திட்டத்தை கவர்னர் சர்க்கார் ரத்து செய்துவிட்டார்கள்.

கடந்த வருஷம் நமது மந்திரி சபை பல்லாரி, அனந்தபூர், கடப்பை, கர்னூல், வட ஆர்காடு, சித்தூர், சேலம், கோயமுத்தூர் ஆகிய எட்டு ஜில்லாக்களில் மதுவிலக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தது.

வரும் அக்டோபர் மாதம் முதல் தேதி முதல், இன்னும் எட்டு ஜில்லாக்களில் மதுவிலக்குத் திட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்படும். அந்த ஜில்லாக்கள் பின்வருபவை: தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி, மதுரை, தென் கன்னடம், மலையாளம், நீலகிரி, குண்டூர், நெல்லூர்.



மீதியுள்ள எட்டு ஜில்லாக்களில் அடுத்த வருஷம் அக்டோபர் மாதம் மதுவிலக்கு அமுலுக்கு வரும். மதுவினால் நமது அரசாங்கத்துக்கு 14 கோடி 10 லக்ஷம் ரூபாய் வருஷ வருமானம் வந்தது. நடந்த 1946ல் எட்டு ஜில்லாக்களில் மதுவிலக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்ததால், அரசாங்கத்துக்கு 5 கோடி ரூபாய் நஷ்டம். வரும் அக்டோபர் மாதம் மற்றும் எட்டு ஜில்லாக்களில் மதுவிலக்கு அமுலுக்கு வந்தால் நம்முடைய சென்னை மாகாண அரசாங்கத்துக்கு இன்னும் 5 கோடி ரூபாய் நஷ்டம் வரும்.

• • •

சர்க்காருக்கு மதுவினால் 14 கோடி 10 லக்ஷம் ரூபாய் வருஷ வருமானம் வந்ததே, அது யாருடைய பணம் என்று நினைக்கிறீர்கள்? நியாயமான முறையில் பார்த்தால் குடியினால் பாதிக்கப்பட்டவர்கள் 28 கோடி 20 லட்சம் ரூபாய் வருஷத்தில் செலவழித்தார்கள். ஏனென்றால், கள்ளுக்கடை கண்ட்ராக்டர்கள், சர்க்காருக்கு 14 கோடி 10 லக்ஷம் வருஷத்தில் கொடுத்தால், அவர்களுக்கு வருமானம் இன்னொரு 14 கோடி 10 லக்ஷம் இருக்குமல்லவா? ஆகையால்தான் குடியினால் பாதிக்கப்பட்டவர்கள் வருஷத்தில் இருபத்தெட்டு கோடி இருபது லட்சம் ரூபாய் செலவழிக்கிறார்கள் என்று சொன்னேன்.

சில நண்பர்கள் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவருவது தவறு என்கிறார்கள். அவர்களுடைய எண்ணத்தில், பாட்டாளி மக்களுக்கு மது நல்லது என்று தோன்றுகிறது. அது தவறான எண்ணம். பாட்டாளி மக்களுக்கு வருமானமோ சொற்பம். அதையும் மதுவுக்குக்

# இதுவே சமயம்!

[காந்திஜி சென்ற 21-ம் தேதி "ஹரிஜன்" இதழில் மதுவிலக்கைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு எழுதி யிருக்கிறார்]

"மதுவிலக்குச்செய்வதற்குஇதுவே மிகவும் சரியான சமயம். இப்போது பொதுஜன சர்க்கார் நடக்கிறது. சமஸ்தானங்கள் உள்பட இந்தியாவின் இரு பகுதிகளும் இந்தச் சீர்திருத்தத்துக்குத் தயாராக இருக்கின்றன. இரு பகுதிகளிலும் உணவுப் பஞ்சம் இருக்கிறது; துணிப் பஞ்சமும் இருக்கிறது. மக்கள் பட்டினியாலும் துணிப் பஞ்சத்தாலும் பீடிக்கப் பட்டிருக்கும் இந்த சமயத்தில், போதைப் பொருள்களை உபயோகிப்பது பற்றிச் சிந்திக்கவும் கூடுமா?

மதுபானத்திலும் கஞ்சாவிலும் செலவிடும் பணம் வீண் விரயத்தும் என்பது மாத்திரம் அல்ல; அவை ஆத்ம உறுதியையும் போக்கிவிடுகின்றன. ஒருவன் குடித்துவிட்டு, அந்தப் போதையில் செய்யும் காரியங்களை, அவன் புத்திஸ்வாதீனமாக இருக்கும்போது ஒருக்காலும் செய்யவே மாட்டான். ஆகவே, எந்த வகையில் பார்க்கப் போனாலும் மதுவிலக்கு ரொம்ப அவசியமானதாகும்.

மதுபானங்களை விற்பதன் மூலம் கிடைக்கும் வருமானத்தை, ஒரு தேசத்தின் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டுவதற்காகவோ, அல்லது வேறு பொதுஜன நன்மைக்குகந்த காரியங்களைச் செய்வதற்காகவோ செலவு செய்வது பெரும் பாதகமாகும். தேச நிர்மாண வேலைகளுக்கு அந்த வருமானத்தை உபயோகிப்பது என்ற ஆசையைப் பொதுஜன சர்க்கார் கைவிட்டுவிட வேண்டும்.

மதுவிலக்கினால் ஏற்படும் ஆத்மீக நலத்தையும் உடல் நலத்தையும் உத்தேசிக்கும்போது, களங்கம் படிந்த கலால் வருமானம் நஷ்டமாவதைப் பொருட்படுத்தவே கூடாது. மதுபானத் தீமையை நாம் ஒழித்துவிட்டால், தேசத்தின் வருமானத்தைப் பெருக்க வேறு எத்தனையோ வழிகளை எளிதில் கண்டு பிடிக்கலாம்.

கொடுத்து விட்ட பிறகு, அவர்களுக்கு எஞ்சி நிற்பது மிகவும் குறைவேயாகும். அதைக் கொண்டு சுகவாழ்வு அடைய அவர்களால் முடியாது. இது மாத்திரமல்ல. மது, புத்தியை மயக்குகிறது. வீண் சண்டைக்குக் கொண்டு போகிறது. மதுவிலக்குச் செய்திருக்கும் ஜில்லாக்களில் வசிக்கும் பெண்மணிகள் மது ஒழிந்ததைக் குறித்து ஆனந்தப்படுகிறார்கள்.

"மதுவிலக்கு பூரணமாக நிலைக்குமா?" என்று சிலர் கேட்கிறார்கள். அதற்குக் காரணம் அமெரிக்காவில் மதுவிலக்கு சித்தி யடையவில்லை. நமது தேசத்திலும் கடப்பை, கர்னூல், பல்லாரி, அனந்தபூர் முதலிய ஜில்லாக்களில் திருட்டுச் சாராயம் செய்யும் வியாபாரிகளைப் பிடிக்க சர்க்கார் 71,208 ரூபாய் வருஷம் ஒன்றுக்குச் செலவழிக்கிறார்கள். இது தெரிந்த ஜனங்களும் மதுவிலக்கு வெற்றி பெறாது என்று நினைக்கிறார்கள். இது தவறான அபிப்பிராயம். மதுவினால் கஷ்டப்படுகிறவர்களுடைய நிலைமை மிகவும் பரிதாபமானது. அவர்களை அதிலிருந்து மீட்கவேண்டியது சர்க்கார் கடமை. அமெரிக்காவில் முடியாத காரியம் நமது தேசத்தில் முடியும்; நிச்சயம் முடியும். சீக்கிரத்தில் மதுவில்லாமல் நமது தேசம் இருக்குமென்ற நம்பிக்கையுடன் என் கட்டுரையை முடிக்கிறேன்.

# மூன்றில் இரண்டு



விசாகபட்டணம்
கிழக்கு கோதாவரி
மேற்கு கோதாவரி
கிருஷ்ணா
குண்டூர்
கர்நூல்
பெல்லாரி
அனந்தபுரம்
கடப்பை
நெல்லூர்
மைசூர்
சித்தூர்
செங்கல்பட்டு
சென்னை
வ. ஆற்காடு
தெ. ஆற்காடு
குடகு
சேலம்
மலையாளம்
கோயமுத்தூர்
திருச்சி
தஞ்சாவூர்
மதுரை
கொச்சி
திருவாங்கூர்
ராமநாதபுரம்
திருநெல்வேலி
சமஸ்தானங்கள்
மதுவிலக்கு அமுலில் உள்ள ஜில்லாக்கள்
வரும் அக்டோபர் 1ம் தேதி முதல் மதுவிலக்கு அமுலுக்கு வரப்போகும் ஜில்லாக்கள்
அடுத்த வருஷம் மதுவிலக்கு அமுலுக்கு வரப்போகும் ஜில்லாக்கள்

# K. S. E.

நவராத்திரி பண்டிகைக்குப்
புதுமாதிரியான உயர்ந்த ரக
கொள்ளேகாலம் பட்டுச் சேலைகள்

★

கிடைக்குமிடம்:

## காத்தாயி சில்க் எம்போரியம்

**கீழமாட வீதி, மயிலாப்பூர், மதராஸ்**

## பூச்சிக் கடி, கொட்டுதல்

**முதலிய விஷத் தீண்டுதல்களை அதிவிரைவில் குணப்படுத்தும்**



விஷப் பூச்சி கடித்த இடத்திலும் கொட்டுவாயிலும் ஜாம்பெக்கைத் தேயுங்கள். ஜாம்பெக்கிலுள்ள சிறந்த மூலிகைத் தைலம் நமச்சல் வலி இவைகளை நீக்கி விஷத்தினால் ஏற்படும் அபாயத்தை அறவே தடுக்கும். கெடி ஏறியோ அல்லது விஷம் வேலை செய்ய ஆரம்பித்து விட்டாலோ ஜாம்பெக் அதை சுத்தப்படுத்தி ரணத்தை ஆற்றுகிறது.

ஹிதமளித்து விஷத் தீண்டுதல்களை விரைவில் சொஸ்தமாக்க சரும வியாதிகளுக்கும் காயத்திற்கும் ஜாம்பெக் ஓர் உன்னத சஞ்சீவி.]



# Zam-Buk

உலகப் பிரசித்திப் பெற்ற மூலிகைக் களிம்பு

மிருகக் கொழுப்பின்மைக்கு உத்தரவாதம்

ஏஜண்டுகள்:—மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்


தொலைந்திடுவாய்!
கள்ளரக்கா, குலத்தொடுநீ
கப்பலேறத் தாமதமேன்?
வள்ளலெங்கள் காந்திமகான்
வாக்குமுற்றும் பலித்ததினி
எள்ளத்தனையும் உன்வாழ்வுக்
கிடமிங்கில்லை இல்லையடா
தெள்ளத் தெளியச் சொன்னேன் நான்
தெரிந்து ஒழிந்து தொலைந்திடுவாய்!
—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.
—ராகவன்—

# மதுவிலக்குத் திட்டம்

மதுவிலக்கு மந்திரி கனம் டேனியல் தாமஸ்

**ப**ல்லாண்டுகளாக மதுபானம் ஜன சமுதாயத்தையே சீர்குலைத்து வருகிறது என்பது எல்லோருக்கும் தெரியும். கள், சாராயம் முதலிய லாகிரி வஸ்துக்களைத் தயாரிப்பதும், அவைகளை அருந்துவதும் உலகத்தில் எல்லா நாடுகளிலும் தொன்று தொட்டு வழக்கமாயிருக்கிறது. நாகரிகம் மலிந்த இக்காலத்தில் பிராந்தி, விஸ்கி, நாட்டுச் சாராயம் முதலிய மதுபானங்களைப் பெருவாரியாக உற்பத்தி செய்து அதையே ஒரு பெரும் தொழிலாக நடத்தியும் வருகிறார்கள். ஒவ்வொரு நாட்டிலும் இக் கெட்ட பழக்கம் புகுத்தப்பட்டிருக்கிறது. மேற்சொன்ன மது வகைகளுடன், போதைதரும் அநேக விதமான இதர வஸ்துக்களையும் தேசத்திற்கு ஏற்றபடி தயாரித்து வருகின்றனர். அத்தகைய மதுபான வஸ்துக்களில் 'கள்' என்பதும் ஒன்று. அது மதுபானம் அருந்துவோர்களின் உணர்ச்சியையும், ஊக்கத்தையும், சுய அறிவையும் குன்றிவிடக் கூடிய தீய குணத்தை யுடையது. மக்களின் வருங்கால சீரமைப்புத் திட்டத்தில் மது விலக்கு என்பது ஒரு முக்கியமான திட்டமாகும். சில ஆண்டுகளுக்கு முன்னர், அமெரிக்காவில் மது விலக்குத் திட்டம் கையாளப் பட்டதும், அது கானடையில் வெற்றி பெறாது கைவிடப்பட்டதும் நாம் யாவரும் அறிந்ததே.



இத் தோல்விக்குப் பலர் பலவிதமான காரணங்கள் சொல்லுகிறார்கள். பெரும்பான்மையான மக்களுடைய ஆதரவு அதற்குக் கிடைக்கவில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள். மதுபான உற்பத்திக் காரர்கள் ஒத்துழைக்காததால்தான் அமெரிக்க மதுவிலக்குத் திட்டம் தோற்றது என்று வேறு சிலர் சொல்லுகிறார்கள்.

ஆனால், நம் இந்தியாவில் மதுவை அறவே ஒழித்துக் கட்டுவது என காங்கிரஸ் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறது. மக்கள் மாண்புற வாழவேண்டுமானால், பசிப்பிணி, வறுமை, நோய் முதலிய தீங்குகளிலிருந்து அவர்கள் விடுதலை அடைய வேண்டுமானால், தேசம் முழுவதும் மதுவிலக்குத் திட்டத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என மகாத்மா காந்தியடிகள் பன்முறையும் எடுத்துரைத்து வருகிறார். இதை யொட்டியே, நம் மாகாணத்தில் காங்கிரஸ் 1937-ம் ஆண்டில் ராஜாஜி அவர்கள் தலைமையில் மந்திரி பதவி ஏற்றதும் மது விலக்குத் திட்டத்தை ஆர்வத்துடன் அமுலுக்குக் கொண்டு வந்தது. இத் திட்டம் சேலம் ஜில்லாவில் ஆரம்பிக்கப்பட்டு, பின்னர் சித்தூர், வட ஆற்காடு, கடப்பை ஜில்லாக்களில் அமுலுக்குக் கொண்டு வரப் பட்டது. மாகாணத்தின் செல்வநிலையை யொட்டி, இதர ஜில்லாக்களிலும் படிப்படியாக இத் திட்டத்தைக் கொண்டு வர ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இத்திட்டத்தின் மூலம் சர்க்காருக்கு உண்டான கலால் வருமான விழுக்காட்டைச் சரிப்படுத்த விற்பனை வரி விதிக்கப்பட்டது. யுத்தம் ஆரம்பமானதும் காங்கிரஸ் சர்க்கார் ராஜிநாமா செய்யவே, பின்னால் ஏற்பட்ட அட்வைஸரி சர்க்கார் இத்திட்டத்தைச் சிறுகச் சிறுகக் கைநழுவ விட்டு, 1944-ல் இதை அறவே நிறுத்தி விட்டனர். காங்கிரஸ் 1946-ம் ஆண்டு ஏப்ரல் மாதத்



தில் மீண்டும் அரசாட்சியை ஒப்புக் கொண்டதும், இத்திட்டத்தை மறுமுறையும் காங்கிரஸ் மந்திரி சபையும், காங்கிரஸ் சட்ட சபை அங்கத்தினர்களும், மாகாண காங்கிரஸ்காரர்களும் உடனடியாக ஏககாலத்தில் மாகாணம் முழுவதிலும் அமுலுக்குக் கொண்டுவர ஆசைப்பட்டனர். ஆனால், மாகாண வருமானம் இதற்கு இடம் கொடாது போகவே, ஆரம்பத்தில் எட்டு ஜில்லாக்களில் மட்டும் சென்ற வருஷம் அக்டோபர் மாதம் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. இந்த வருஷம் அக்டோபரில் மற்றும் எட்டு ஜில்லாக்களிலும், அடுத்த வருஷம் - அதாவது 1948 அக்டோபரில், மீதியுள்ள எட்டு ஜில்லாக்களிலும் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வருவதென்று திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. இத்திட்டம் தற்பொழுது வட ஆற்காடு, சித்தூர், சேலம், கோயமுத்தூர், கடப்பை, கர்நூல், அனந்தப்புரம், பெல்லாரி முதலிய ஜில்லாக்களில் சென்ற ஒரு வருஷமாக இருந்து வருகிறது. இவ்விடங்களில் எவ்வளவு தூரம் இத்திட்டம் பயனளித்திருக்கிறது என்பதை ஆராய்வோம்.

கலால் மூலம் மாகாணத்திற்கு வருடந்தோறும் 17 கோடி ரூபாய் கிடைத்து வருகிறது. இந்த 17 கோடியும் மக்களால் குடியின் மூலம் செலவழிக்கும் பணத்தின் ஒரு பகுதியேயாகும். மதுவின்மேல் செலவிடும் தொகை மதுவின் மூலம் கிடைக்கும் வருமானத்தில் சாதாரணமாக நான்கு பங்காகும். அதாவது, 68 கோடி ரூபாய் வருடந்தோறும் நம்மவர்களால் மதுவுக்காகச் செலவழிக்கப்பட்டு வருகிறது. நமது ராஜதானியின் ஜனத்தொகை சுமார் 5 கோடி. இதில் உத்தேசமாகப் பத்தில் ஒரு பங்கு மக்கள் குடிப் பழக்கத்தில் ஈடுபட்டிருக்கின்றனர். அதாவது, ஐம்பது லக்ஷம் பேர்கள் அனுவசியமாய் சுமார் 70 கோடி

ராகவன்

ரூபாயைக் குடியில் செலவழிக்கின்றனர். இதில் பெரும்பான்மையோர் பாட்டாளி மக்களே.

மேற்சொன்ன 8 ஜில்லாக்களிலும் மதுவிலக்குத் திட்டம் அமுலுக்குக் கொண்டு வந்தது முதல், குடிப் பழக்கத்திலிருந்த சுமார் 75 முதல் 90 சத விகிதம் பேர் இத்தீய பழக்கத்தை ஒழித்து, எஞ்சிய பொருளை வயிரார உண்டு உடுத்து சந்தோஷமாக வாழ்ந்து வருகின்றனர் என்பது உறுதி. மதுவிலக்குத் திட்டத்தைத் தொடர்ந்து கிராம மக்களின் வாழ்க்கையையும் சீர்திருத்தி அமைக்கும் திட்டத்தையும் காங்கிரஸ் சர்க்கார் மேற்கொண்டிருக்கின்றனர். இந்த எட்டு ஜில்லாக்களிலும் சுமார் 5,800 கிராம சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டு அவற்றில் கிராம சீர்திருத்தத் திட்டமும் புகுத்தப்பட்டிருக்கின்றன. இன்னும் சடுகுடு, கோலாட்டம், கும்மியாட்டம் மற்றும் ஆடல் பாடல் முதலிய களியாட்டங்களும் ஆங்காங்கே நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. மக்களின் பொருளாதார நிலைமையைச் சீர்திருத்தக் கூட்டுறவு சங்கங்களும், எஞ்சிய பொருளைக் கூட்டுறவு சங்கங்களில் மீத்து வைக்கவும், வீடு கட்டப் பண உதவியும், கால் நடைகள் வாங்குவதற்கும் விவசாய அபிவிருத்திக்கு வேண்டிய பொருள் உதவியும் அளிக்க வேண்டிய சாதனங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மக்கள் அபிவிருத்தி அடையும் இத்தகைய திட்டத்தைக் கண்காணிக்கும் முறையில் ஒவ்வொரு ஜில்லாவிலும் விசேஷ சர்க்கார் அதிகாரிகள் இருந்து வருகிறார்கள். மது விலக்குத் திட்டத்தைச் செவ்வனே நடத்துவதில் சங்கடங்கள் இல்லாமல் இல்லை. இதற்கு முதல் முதலாகப் பொது மக்களின் ஒத்-



துழைப்பு அவசியம் தேவை. ஒவ்வொரு நாட்டினரும் பெண்ணுயிருந்தாலும் சரி, ஆணுயினும் சரி—நமது நாடு சுபிட்சம் அடைய வேண்டும், நமது வாழ்வு மாண்புற வேண்டும், அதற்கு மதுவிலக்கே பெரியதொரு ஆதாரமெனக் கங்கணம் கட்டி இத்திட்டத்தை வெற்றிபெறச் செய்தாலன்றி வேறென்றாலும் இயலாது. இத்தருணத்தைக் கொண்டு மக்களுக்குக் கள்ளத்தனமாகச் சாராயம் இறக்கி, விற்று, அதன்மூலம் சம்பாதிக்கும் வேலையில் சிலர் முற்பட்டிருக்கின்றனர். இவ்விதமான காரியங்கள் பெரும்பாலும் நம் மாகாணத்தை ஒட்டிய மைசூர், ஐதராபாத், ராயலசீமா பிரதேசத்திலிருக்கும் சில சமஸ்தானங்களின் எல்லைகளிலும் சேலம், கடப்பை ஜில்லாக்களிலும் நடைபெறுகின்றன. மைசூர், கொச்சி சமஸ்தானங்களிலுங்கூட மதுவிலக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர ஏற்பாடுகளாகியிருக்கின்றன. இதுபோலச் சில வருடங்களில் நமது மாகாணம் மட்டுமின்றி, நம்மை ஒட்டிய சமஸ்தானங்களிலும் கூடப் பூரண மதுவிலக்குத் திட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்படும் என நம்புகிறேன். திருட்டுச் சாராயம் இறக்குவது என்பது கொஞ்ச நாளைக்கே நடக்கும். இதை ஒழிப்பதும் கடினமல்ல. போதையுடன் ஒருவன் இருந்தால் குற்றவாளி என்று தண்டிக்கும்படி மது விலக்குச் சட்டத்திருத்த மசோதா தயாரிக்கப்படுகிறது. இதன் மூலம் திருட்டுத்தனமாகச் சாராயம் இறக்குவதையும், விற்பதையும், அதை வாங்கி அருந்துவதையும்கூட வெகு சீக்கிரத்தில் தடுக்க ஏதுவாகும். ஆனால், இது வெற்றியடைய வேண்டுமானால் மக்களுடையவும், கிராமாதிகாரிகள், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் முதலியோர்களுடையவும் ஒத்தாசை மிகவும் தேவை.

இவ்வருடம் அக்டோபர் முதல் தேதியில் மதுவிலக்குத் திட்டத்தை தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி, மதுரை, நெல்லூர், குண்டூர், மலையாளம், தென் கன்னடம், நீலகிரி ஜில்லாக்களில் அமுலுக்குக் கொண்டு வர சர்க்காரால் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. இம்மகத்தான வைபவத்தைச் சிறப்பாக ஒவ்வொரு ஊரிலும் கொண்டாட உத்தியோகஸ்தர்களும் பொது மக்களும் சேர்ந்து ஏற்பாடு செய்ய வேண்டும். அன்று, பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள் நடத்த வேண்டும். முன்பு குடியில் ஈடுபட்டவர்களுக்குக் கள்ளுக் கடைகளுக்குப் பக்கத்தில் தின்பண்டங்கள், தேநீர் முதலியன இலவசமாக வழங்கப்படும்.

மதுவிலக்குத் திட்டத்தின் மூலம், மக்களின் பொருளாதார நிலையைப் பண்படுத்தும் முறையில் இவ்வரியதோர் திட்டத்தைச் சென்னை அரசாங்கத்தார் மேற்கொண்டிருக்கின்றனர்.

காங்கிரஸ் சர்க்காருடைய இந்தப் பூரண மது விலக்குத் திட்டத்துக்கு இம் மாகாண மக்கள் எல்லோரும் ஆதரவளிக்கும்படியாகச் செய்ய வேண்டுமென்று இக் கட்டுரையை வாசிக்கும் ஒவ்வொரு அறிஞரையும் வேண்டிக் கொள்கிறேன்.




இந்தியன் அடிமையானதற்கு மதுபான வழக்கமும் ஒரு காரணமாக இருந்திருக்கிறது!

# R. S. E.

நவராத்திரி பண்டிகைக்காக ஸ்பெஷல் கொள்ளேகாலம் பட்டுப் புடவைகளும் பாவாடை மடிகளும், புது மாதிரி நூல் சேலைகளும் கிடைக்குமிடம்:

## ராதா ஸில்க் எம்போரியம்

(போன்: 84188)

★

சன்னதித்தெரு
மயிலாப்பூர், மதராஸ்

★

பிராஞ்சு:
பெரிய தெரு, கும்பகோணம்

---

## மதராஸ் ஸில்க் பாலஸ்

பாண்டிபஜார்
தியாகராயநகர், மதராஸ்


## பிரபல திருமணம்



சித்திவிநாயகம் — காமாக்ஷி

செங்குந்தர் குலத்தில் பிரபல மிராசுதாராக விளங்கிய காலஞ் சென்ற டி. கே. எஸ். கலியாணசுந்தர முதலியார் அவர்கள் குமாரர், திருநிறைச் செல்வர் சிரஞ்சீவி டி. கே. சித்தி விநாயகத்திற்கும், மஞ்சக்கொல்லை ஸ்ரீ பி. வி. ரங்கய்ய முதலியாரவர்கள் குமாரி, திருநிறைச் செல்வி சௌபாக்கியவதி காமாக்ஷிக்கும் 11—9—47 வியாழக்கிழமை, திருவாரூர் மடப்புரத்தில் மணமகன் இல்லத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. விவாகத்திற்கு அநேக பிரபலஸ்தர்கள் விஜயம் செய்திருந்தனர். ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்களின் இன்னிசை விருந்தும் நடைபெற்றது. திருமண வைபவத்தின் போது மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும் மிக விலையுயர்ந்த பரிசுகளும் வந்து குவிந்தன.

# தமிழர் திருநாள்

குரூபியாக இருப்பவனைக் கண்டு உலகம் அருவருப்படைகிறது. ஆனால் அவனுடைய தாய் அருவருப்படைவதில்லை; அன்புடன் அணைத்துக் கொள்ளுகிறாள்!

மூர்க்கனைக் கண்டு உலகம் முகத்தைச் சுளித்துக் கொள்ளுகிறது. ஆனால் அவனுடைய தாய் முகத்தைச் சுளித்துக் கொள்ளுவதில்லை; அன்பு மொழிகளை அள்ளிச் சொரிந்து அவனைத் திருத்த முயல்கிறாள்!

கொலைகாரனைக் கண்டு உலகம் துரத்தியடிக்கிறது. ஆனால் அவனுடைய தாய் துரத்துவதில்லை; "அஞ்சாதே!" என்று கூறித் தஞ்சமளிக்கிறாள்!

இப்படி மகன் செய்யும் எத்தகைய கொடிய குற்றமாயினும் பொறுத்தருளும் தாய், ஒரே ஒரு குற்றத்தை மட்டும் பொறுப்பதில்லை என்கிறார் பொய்யாமொழிப் புலவர்.

அந்தக் குற்றம் என்னவென்கிறீர்கள்? "தன் தனயன் கள்ளுண்டான்!" என்ற குற்றந்தான்!

அவனைத் தன் மகன் என்று சொல்லிக் கொள்ளவும், முகாலோபனம் பண்ணவும்கூட அவளுக்குப் பிடிப்பதில்லையாம்!

இப்படியாகக் கள்ளுண்டவனைக் கண்டு அவனுடைய தாயே வெறுக்கிறாள் என்றால், பெரியோர்கள் அவனை வெறுப்பதற்குக் கேட்கவா வேண்டும்?

ஈன்றாள் முகத்தேயும்
இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக்
களி!

[ஈன்றாள் : தாயார் ; இன்னாதால் : பிடிக்கவில்லையென்றால் ; சான்றோர் : அறிவினும், வயதினும் பெரியவர் ; களி : கள்ளுண்டவன்.]

• • •

வள்ளுவர் அத்துடன் நின்றுவிடவில்லை; மதுவிலக்கானது பிரசாரத்தினால் நிறைவேறக் கூடிய காரியமல்ல,—அதற்குச் சட்டமே இயற்ற வேண்டும் என்ற தீவிரக் கொள்கையைக் கொண்டிருந்தார் என்றும் தெரிகிறது.

இருட்டில் ஒருவனைக் கையில் தீவட்டியுடன் தேடிக் கொண்டு போகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் ஒரு குளத்தில் இறங்கி மூழ்கி ஒளிந்து கொண்டானானால் தீவட்டியின் வெளிச்சத்தைக் கொண்டு அவனைத் தேடிக் கண்டு பிடித்துவிட முடியுமா? குளத்தில் இறங்கு முன்னமேயே தீவட்டி அணைந்து விடுமல்லவா?

அதைப்போலத்தான் குடித்தவனிடம் குடியினால் ஏற்படும் தீமைகளைப் பற்றிக் கூறி, குடிக்காமல் அவனைத் தடுத்து விடலாம் என்று நினைப்பதும் என்கிறார் தெய்வப் புலவர் திருவள்ளுவர்.

களித்தானைக் காரணங்
காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ
யற்று!

[களித்தானை : குடித்தவனை ; தீ : தீவட்டி; துரீஇயற்று: தேடுவது போலாகும்.]

இவ்விதம் இரண்டாயிர வருஷங்களுக்கு முன்பே மதுவைச் சட்டத்தின் மூலம் ஒழிக்க வேண்டுமென்று விரும்பிய வள்ளுவரின் கனவு நனவாகும் இந்நாள், தமிழரின் திருநாளல்லவா?

• • • • • • • • • • • • • • • • • • • •

## ஆரோக்கியத்துக்கு அஸ்திவாரம்

"மதுவிலக்கினால் வருமானத்தில் நமக்குக் கொஞ்சம் நஷ்டம் ஏற்படலாம். ஆனால், நாம் தேசத்தின் உண்மையான செல்வத்தைப் பெருக்கவும் ஜனங்களை ஆரோக்கியம் உள்ளவர்களாக்கவும் முற்பட்டிருக்கிறோம். இதற்கு அஸ்திவாரம் அமைப்பதற்கு மதுவிலக்கு அத்தியாவசியமாகும்."

—பண்டித ஜவாஹர்லால் நேரு.

• • • • • • • • • • • • • • • • • • • •

# பொன் விழாவின் உதயம்



பண்டிட் டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

வியாதியினும் அவதிப்படும் மனித சமூகத்துக்கு சேவை புரிவதில் ஐம்பதாவது வருஷம் ஆரம்பமாகின்றது. என்றும் போல் இன்றும் ஜீவாம்ருதம் வியாதிக்குப் பின் குணம் பெறுவோர், பலஹீனர் அனைவருக்கும் உகந்த அருமையான டானிக்காக விளங்குகிறது.



ஆயுர்வேதாஸ்ரமம் லிட்

மதராஸ் 17



## உலகில் மிகச் சிறந்த பெளண்டன் பேனு

ஏனென்றால் எல்லா சீதோஷ்ண ஸ்திதியிலும் தன்மையை இழக்காமலிருக்க விசேஷமாக ப்ளாட்டினம் தோய்க்கப் பட்டிருக்கிறது—உறுதிக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறது.

ஏனென்றால், உலகத்தில் கோடிக் கணக்கானவர்களுக்கு இருபத்தைந்து வருஷங்களாக ப்ளாட்டினத்தின் மேலே ஒரு விசேஷ மோஸ்தர் ஏற்பட்டிருக்கிறது.

ஏனென்றால், கெடுவதற்கு ஆதாரமே இல்லாமல், எந்த விதமான மசியினாலும் நன்றாக எழுதக் கூடியது.

ஏனென்றால், இந்த ஏற்றமான விலையிலும் உலகில் அதிகமாக வாங்கி வழங்கப்படுகிறது.




GOLDEN

**Platignum**

கோல்டன்

# ப்ளாட்டினம்

இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்டது

வியாபார நிபந்தனைகளுக்கு கீழ்க்கண்ட பூரண உரிமையாளர்களுக்கு எழுதவும்:

முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்

குவீன் மான்ஷன்ஸ்
பாண்டியன் ரோடு, பம்பாய்

Ad. No. PI R



# சாபத்தைப்

நான் அகில இந்தியாவுக்கும் ஒரு மணி நேரம் சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டால், முதலாவதாக என்ன செய்வேன் தெரியுமா?

எல்லா மதுபானக் கடைகளையும் மூடுவேன்; மது இறக்குவதற்கு மட்டுமே உபயோகப்படும் மரங்கள் எல்லாவற்றையும் அழிப்பேன். தொழிலாளர்கள் சௌகரியமாக வாழ்வதற்கேற்ற வசதிகளைச் செய்து கொடுக்கும்படியாகத் தொழிற்சாலை முதலாளிகளைக் கட்டாயப் படுத்துவேன். அதற்கு வேண்டிய பணம் இல்லை என்று முதலாளிகள் சொன்னால், அந்தத் தொழிற்சாலைகளையே மூடி விடுவேன்.

மதுவினால் கிடைக்கும் வருமான நஷ்டத்தை ஈடு செய்வதற்காக, நான் ராணுவச் செலவை ஒரேயடியாகக் குறைப்பேன். இந்திய சேனாபதி புதிய நிலைமைக்கு ஏற்ற முறையில் சமாளித்துக் கொள்ள வேண்டும் என்றும் நான் எதிர் பார்ப்பேன்.

முதலாளிகளுடைய தொழிற் சாலைகளை சர்க்காரே எடுத்து, நான் சொன்ன முறையில் லாபகரமாக நடத்த முடியாது என்பது, அந்த ஒரு மணி நேரத்துக்குள் முடிவாகி விட்டதென்று வைத்துக் கொள்வோம். அப்போது நான் என்ன செய்வேன்? வேலை இழந்து சோம்பிக் கிடக்கும் தொழிலாளர்களை, அந்தத் தொழிற் சாலைகளுக்குப் பக்கத்தில் அமைக்கப்படும் 'மாடல்' பண்ணைகளுக்கு அழைத்துக் கொண்டு போவேன்.

* * *

அப்படி மதுவை ஒழித்தால், நம் குழந்தைகளுக்குக் கல்வி அளிப்பது எப்படி என்று கேட்கலாம். மதுவின் மூலம் கிடைக்கும் வருமானத்தை வைத்து, நம்முடைய குழந்தைகளுக்குக் கல்வி போதிப்பது என்பது, நம்முடைய தேசத்துக்கே பெரும் அவமானம் விளைவிக்கக்கூடிய விஷயமாகும். இதை நான் துணிந்து கூறுகிறேன்.

நம்முடைய குழந்தைகளுக்குக் கல்வி புகட்ட முடியாவிட்டாலும் பாதகம் இல்லை. நாம் அந்தத் தியாகத்தையாவது செய்து, இந்தக் குடிப் பழக்கத்தை ஒழித்து விடுவது என்று புத்திசாலித்தனமாக முடிவு செய்ய வேண்டும். இல்லாவிடில்,

# போக்குக!

[மகாத்மா காந்தி]

நாம் நம்முடைய எதிர்கால சந்ததியின் சாபத்துக்கு உரியவர்களாவோம். ஆனால், இந்தக் குடிப் பழக்கத்தை ஒழிப்பதற்காக, நம்முடைய குழந்தைகளின் கல்வியைத் தியாகம் செய்ய வேண்டிய அவசியமே இல்லை.

கல்வி சுயதேவைப் பூர்த்தியாக இருப்பதற்காக, நம்முடைய பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் நூல் நூற்கும் திட்டத்தைப் புகுத்த வேண்டும் என்று நான் சொல்வதைக் கேட்டு, உங்களிற் பலர் சிரித்தது எனக்குத் தெரியும். அந்த நூல் நூற்புத் திட்டத்தின் மூலம்தான் கல்விப் பிரச்னையைச் சமாளிக்க முடியும்; வேறு எந்தத் திட்டத்தாலும் முடியாது. இதை உறுதியாகச் சொல்லுகிறேன். இனிமேல் புதிதாக ஏதாவது வரி விதித்தால் அதைத் தேசம் தாங்காது; இப்போதுள்ள வரியைக்கூட தேசம் தாங்க முடியவில்லை. அபினி மூலமும் மற்றக் குடி வகைகள் மூலமும் கிடைக்கும் வருமானத்தை நாம் கைவிட வேண்டும் என்பது மாத்திரம் அல்ல; நாளுக்கு நாள் பெருகிக் கொண்டு வரும் மக்களுடைய வறுமையைப் போக்க வேண்டுமானால், மற்ற வகைகளில் சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானத்தைக்கூட ரொம்ப ரொம்பக் குறைக்க வேண்டும்.

* * *

இந்தியாவில் குடிப் பழக்கத்தை ஒழிப்பதற்குப் பலவந்தத்தைக் கையாளக் கூடாதென்றும், குடிக்க விரும்புபவர்களுக்கு அதற்கான வசதிகளை அளிக்க வேண்டும் என்றும் சிலர் வாதிக்கிறார்கள். இதைக் கேட்டு நீங்கள் ஏமாந்து விடக் கூடாது. மக்களுடைய தீச்செயல்களுக்குச் சர்க்கார் உதவி யளிக்கவில்லை. விபசார விடுதிகளுக்குச் சட்ட வரம்பு ஏற்படுத்தி அவைகளுக்கு நாம் 'லைசென்ஸ்' கொடுக்கவில்லை. திருடர்களுடைய திருட்டு ஆசைக்கு நாம் வசதி செய்து கொடுக்கவில்லை. திருட்டையும் விபசாரத்தையும் விட, குடி ரொம்ப மோசமானதென்று நான் கருதுகிறேன். குடி அந்த இரண்டுக்கும் தந்தை அல்லவா?

[மகாத்மாஜி மதுவிலக்கு சம்பந்தமாக சுமார் முப்பது முப்பத்தைந்து வருடங்களுக்கு முன் தம்முடைய "யங் இந்தியா"வில் எழுதியது.]

## உண்மைக் காப்பு



மதுவிலக்கினால் பெண்களுக்குத்தான் விடுதலை. இனிமேல் அவர்களுக்குத் தான் இன்பம். இதுவரை அவர்கள் கையில் அணிந்திருந்தது உண்மையான காப்பு அல்ல; மதுவிலக்கு சட்டம்தான் உண்மையான காப்பு. தங்களைக் காப்பாற்றும் இந்த மதுவிலக்குச் சட்டத்தைப் பெண்கள்தான் ஜாக்கிரதையாகக் காப்பாற்ற வேண்டும்.

— ராஜாஜி.

# குடிப்பதைத் தடுப்போம்

மாரியம்



குடிப்பதைத் தடுப்பதே
கோடி கோடி புண்ணியம்
அடிப்பினும் பொறுத்து நாம்
அன்புகொண்டு வெல்லுவோம் (குடி)

மக்களை வதைத்திடும்
மனைவியை உதைத்திடும்
அக்கமான கள்ளினைத்
தொலைப்பதே துரைத்தனம் (குடி)

பித்தராகி, ஏழைகள்
பேய்பிடித்த கோலமாய்ப்
புத்திகெட்டுச் சக்தியற்றுப்
போனதிந்தக் கள்ளினால் (குடி)

பாடுபட்ட கூலியைப்
பறிக்குமிந்தக் கள்ளினை
வீடுவிட்டு நாடுவிட்டு
வெளியிலே விரட்டுவோம் (குடி)

கஞ்சியின்றி மனைவிமக்கள்
காத்திருக்க வீட்டிலே
வஞ்சமாகக் கூலிமுற்றும்
வழிபறிக்கும் கள்ளினை (குடி)

மெய்தளர்ந்து மேனிகெட்டுப்
போனதிந்தக் கள்ளினால்
கைநடுக்கம் கால்நடுக்கம்
கண்டதிந்தக் கள்ளினால் (குடி)

தேசமெங்கும் தீமைகள்
மலிந்ததிந்தக் கள்ளினால்
நாசமுற்று நாட்டினர்
நலிந்ததிந்தக் கள்ளினால் (குடி)

குற்றமற்ற பேர்களும்
கொலைஞராவர் கள்ளினால்
கத்திக்குத்து சண்டைவேண
கள்ளினால் விளைந்ததே (குடி)

குற்றமென்று யாருமே
கூறுமிந்தக் கள்ளினை
விற்கவிட்டுத் தீமையை
விதைப்பதென்ன விந்தையே! (குடி)

# விட்டது சனியன்

விட்டது சனியன் விட்டது சனியன்
விட்டது நம்மை விட்டதடா
கொட்டுக முரசு கொம்பெடுத் தூது
கொடும்பாவி கன்னைக் கொளுத்திவிட்டோம்
(விட்டது)

செத்தது கன்பேய் இத்தினம் இதையினி
தீபாவளிபோல் கொண்டாடு
பத்திரம் கன்மேல் சித்தம் வாரா விதம்
பார்ப்பதும் காப்பதும் உன்பாரம்
(விட்டது)



கூலியைத் தொலைப்பதும் தாலியை இழப்பதும்
கூடிட ஏசிடப் பேசுவதும்
சாலையில் உருண்டொரு சவமெனக் கிடப்பதும்
சந்தி சிரிப்பதும் இனியில்லை
(விட்டது)

பெற்றதன் குழந்தைகள் சுற்றி நடுநடுங்கப்
பேயெனும் உருவொடு வாய்குளற
உற்றவர் உறவினர் காறி உமிழ்ந்திட
ஊரார் நகைப்பதும் ஒழிந்ததினி
(விட்டது)

விடிகிற வரையிலும் அடிதடி ரகளை
வீதியில் மாதர்கள் சோதனையும்
குடிவெறி யால்வரும் கொடுமைகள் யாவும்
கூண்டோ டொழிந்தது இனிமேலே
(விட்டது)

காந்தியின் அருந்தவம் சாந்தமும் பலித்தது
காங்கிரஸ் ஆட்சியும் ஓங்கிடுமே
போந்தது புதுயுகம் தீர்ந்தது கலிபலம்
பூமிக்கே ஒரு புதுமையிது
(விட்டது)



சக்கரவர்த்தி நம் ராஜாஜிக்கொரு
சன்மானம் நாம் தந்திடுவோம்
அக்கரையோடவர் ஆணைப்படி கன்னில்
ஆசை புகாவிதம் காத்திடுவோம்
(விட்டது)

பாழும் கள்ளால் பட்டதை நினைத்தால்
பதைக்குது நெஞ்சம் கொதிக்குதடா
வாழும் நாடினி ஏழைகளிங்கிலை
வானவர் வணங்கிட வாழ்ந்திடுவோம்
(விட்டது)

—நாமக்கல் கவிஞர்.



# சித்திர தையலுக்கு ஏற்ற அழகான பூ சித்திரங்கள் அடங்கிய புஸ்தகம்



இந்த அபூர்வ புஸ்தகத்தில் 125 உருப்படிகளுக்கு மேலான பல அளவு உள்ள விதம் விதமான பூ சித்திரங்கள் போட்டிருக்கிறது. இந்த சித்திரங்கள் பெண் மணிகளுடையவும், குழந்தைகளுடையவும் அங்கிகள், ரவிக்கைகள், சேலை ஓரங்கள், மேஜை புடவைகள், கைகுட்டைகள் இவைகளை எல்லாம் அழகான பூ மாச் சித்திரங்களால் அலங்கரிக்கலாம். இந்த புஸ்தகத்தில் வரைந்திருக்கும் சித்திரங்கள் உங்களுக்கு பிரியமான புடவைகள் மேல் வைத்து டிரேசிங் (Tracing) பேப்பர் வைத்து சுலபமாய் வரைந்துவிடலாம். வரைந்தபின் உங்களுக்குத் தேவையான நூல்களைக்கொண்டு சித்திரங்களை தைத்துக்கொள்ளலாம்.

## புஸ்தகம் விலை ரூ. 2 அணா 15. தபாற் கூலி அணா 6.

இந்த தொகைக்கு 5 ஷில்லிங் பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் நமக்கு அனுப்பினால் புஸ்தகம் இரண்டும் உடனே ரெஜிஸ்ட்டர் தபால் வழியாக அனுப்புவோம். இந்த பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் இந்தியாவில் எல்லா தபால் ஆபீஸிலும் கிடைக்கும். கிடைக்காவிட்டால் ரூபாய் 3 அணா 5-க்கு மணி ஆர்டர் அனுப்பவும். இந்தியா போஸ்டல் ஆர்டர் ஏற்றுக்கொள்ள முடியாது.

## பெண்மணிகள் அணியும் ரவிக்கை தைக்கும் பேஷன் அடங்கிய புஸ்தகம்

இந்த அபூர்வ புஸ்தகத்தில் இந்தியா பெண்களும், தமிழ் நாடு, ஆந்திர தேசப் பெண்களும், இந்து, பிராமணப் பெண்களும், பம்பாய், பார்சி, முஸ்லீம் பெண்களும் அணியக்கூடிய 90 மாதிரி ரவிக்கை பேஷன் படங்கள் அடங்கி இருக்கிறது. விலை ரெஜிஸ்ட்டர் தபால் கூலி உள்பட 2 ஷில்லிங் 6 பென்ஸ் அல்லது 1 ரூபாய் 10 அணா.

## பெண் குழந்தைகளும், வாலிபப் பெண்களும் அணியக் கூடிய உடுப்புகள் தைக்கும் மாதிரி அடங்கிய புஸ்தகம்

இந்தப் புஸ்தகத்தில் 86 விதமான பேஷன் படங்கள் அடங்கியது. 2 வயது முதல் 12 வயது வரையிலுமுள்ள பெண் குழந்தைகளுக்கு தைக்க வேண்டிய உடுப்பு மாதிரிகள் அடங்கியது. ரெஜிஸ்ட்டர் தபால் கூலி உள்பட விலை 2 ஷில்லிங் 6 பென்ஸ் அல்லது ரூபாய் 1 அணா 10.

வி. பி. வழியாய் சாமான் அனுப்ப முடியாது.

**X. P. PAIVA, P. O. Box 294, 77, Main Street, Colombo, CEYLON**

# பாணிக்கிரகணம்

கே. எஸ். எஸ். ராகவன்




பதின்மூன்றாம் அத்தியாயம்

## தனி சர்க்கார்

கான்ஸ்டேபிள் விழித்துக் கொள்வதற்கு முன் 'சாமி'யாரை அப்புறப் படுத்துவதில் முனைந்தான் ராஜூ. ஆனால் அப்பாவியான அந்தக் கான்ஸ்டேபிள், சாமியார் தனக்கு ஓர் ஆபத்தும் இல்லை என்று சொன்ன சந்தோஷச் செய்தியைக் கேட்டுத் தன்னை மறந்து விட்டான்.

அன்று இரவைச் சத்திரத்தில்தான் கழித்தார்கள். மறுநாள் பஸ் ஏறி, சிவனேரி போய்ச் சேர்ந்தார்கள். மேற்கொண்டு என்ன செய்வது என்பதைப் பற்றி ஒரு சிறிய 'கான்பரன்ஸ்' நடந்தது.

"என்னைக் கேட்டால் இன்னும் பத்துப் பதினைந்து நாட்களுக்குச் சும்மா இருப்பது தான் மேல் என்று தோன்றுகிறது. கான்ஸ்டேபிள் சொன்னதிலிருந்து எதிரி விழித்துக் கொண்டிருக்கிறான் என்பது தெரிகிறது. இந்தப் பத்து நாட்களில் நம் ஏற்பாடுகளை யெல்லாம் 'பக்கா'வாகச் செய்து கொள்ளலாம். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டான் ராஜூ.

"எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது!" என்றான் சாரங்கன், தலையைத் தடவிக்கொண்டே. பத்து நாளில் கொஞ்சமாவது தலை மயிர் வளர்ந்து விடுமல்லவா?

கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொள்ளும்போது அவனுக்கு அழுகையாக வந்தது. சிறு பையனாயிருந்த நாளில் அவன் தாயார் தலை பின்னி விட்டதை நினைத்துக் கொண்டு ஒரு பெருமூச்சு விட்டான். அம்மா இப்பொழுது எங்கு இருக்கிறாளோ, தன்னைப் பற்றி என்ன நினைக்கிறாளோ?

"என்ன சாரங்கன்! ஆண்பிள்ளைகள் கூடவா தலை மயிர் போய்விட்டதே என்று அழுவார்கள்? இதோ பாருங்கள், என் தலை மயிரைத் தேசத்திற்காகத் தியாகம் செய்து விட்டேன்!" என்று சொல்லிக் கொண்டே கிருஷ்ண குமாரி தலையிலிருந்த சவரியை எடுத்துக் கீழே போட்டாள்.

சாரங்கனுக்குச் 'சுருக்'கென்றது. "தேசத்துக்குத் தலை மயிரைத் தியாகம் செய்துவிட்டேன்!" என்று அவள் ஹாஸ்யமாகச் சொன்னதுகூட அவனுக்குப் பிடிக்கவில்லை.

சாரங்கனும் ராஜூவும் ஓர் ஆள் வேலையைச் செய்தால் கிருஷ்ணகுமாரி மூன்று பேர் செய்யக் கூடியதை அநாயாசமாகச் செய்தாள். "பெண்களால் கடினமான வேலைகளைச் செய்ய முடியுமா? அவர்கள் படித்து என்ன பிரயோஜனம்? பி. ஏ. பாஸ்

செய்தவனால் பலமாகக் கூட அடிப்பது முடியாதே!" என்று சாரங்கன் ஒரு காலத்தில் பரிகாசம் செய்ததுண்டு. ஆனால் கிருஷ்ணகுமாரியின் செயல் திறனைக் கண்டு அவன் அயர்ந்தே விட்டான். "ஆணும் பெண்ணும் சரி நிகர் என்று சொல்வது தப்புத்தான். ஆண்களைவிடப் பெண்கள் எவ்வளவோ மேலானவர்கள்!" என்று அவன் பறை சாற்றத் தொடங்கி விட்டான்.



வானர சேனையைச் சேர்ந்த ஒவ்வொருவரையும் கிருஷ்ணகுமாரிக்கு அன்னியோன்னியமாகத் தெரியும். அவள் 'போ!' என்பதற்குமுன் அவர்கள் பாய்ந்ததின் காரணத்தை அறிந்துகொள்ளச் சாரங்கனுக்கு அதிக நாள் ஆகவில்லை. அவர்களில் யாராவது ஒருவருக்கு ஜுரம், தலைவலி என்றால் போதும்; கிருஷ்ணகுமாரி தானே மருந்து கொண்டு வந்து கொடுப்பாள். அவசியமானால் பக்கத்திலிருந்தே 'நர்ஸ்' வேலை செய்வாள். வேறு முக்கியமான வேலையைப் புறக்கணித்து விட்டுக் காலையிலும், மாலையிலும் அவர்களை விசாரிக்காமல் இருக்க மாட்டாள். ஒரு விஷயத்தில் மட்டும் கிருஷ்ணகுமாரி தன் இனத்தவர்களிடம் தோற்றவள் தான் — ஆடை உடுத்தும் வேலையில் அவள் அதிகக் கவனம் செலுத்துவது கிடையாது. ஆனால், வேஷம் போட்டுக் கொள்ளும்போது மட்டும் நாடகக்காரர்கள்கூட அவ்வளவு 'மெனக்கட' மாட்டார்கள்!

ஜயப்பிரகாஷைச் சந்தித்த பிறகு தனி சர்க்காரின் அமைப்பையே மாற்றி விட்டார்கள். இதுவரையில், அவர்கள் தங்கள் அதிகாரத்தை நிலை நாட்டுவதில்தான் அதிகக் கவனம் செலுத்தினார்கள். "இந்தப் பிரதேசத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சின்னம் ஒன்றுகூடக் கிடையாது. இது ஒரு சுதந்திர ஜில்லா!" என்று சொல்லிக் கொள்வதில் ஒரு தனிப் பெருமை இருந்தது. ஆனால் அதைக் காரியத்தில் சாதிப்பது மிகவும் சிரமமாகத்தானிருந்தது. தண்டோபாயத்தை அடிக்கடி கையாள வேண்டி யிருந்தது. ஆதியில் அந்தக் கிராமத்திலிருந்த கர்ணம், பட்டாமணியம், மற்றும் கிஸ்தி வசூலிப்பதற்காக இருந்த சில்லறை ஆட்கள் எல்லோரும் தனி சர்க்கார் சொல்லைக் கேட்க மறுத்தனர். முக்கியமாக, கிஸ்திப்பணத்தை இவர்களிடம் கொடுக்க அவர்கள் இசையவில்லை. உடனே அவர்களைத் தனி சர்க்கார் வேலையிலிருந்து 'நீக்கி' விட்டது. அதாவது அந்தக் கிராமத்திலிருந்த மாட்டுப்பட்டியில் அவர்களைப் பத்து நாள் போட்டு வைத்திருந்தார்கள். பதினோராம் நாள் அவர்களே, "நாங்கள் இனிமேல் நீங்கள் சொல்கிறபடி கேட்கிறோம்" என்று சொல்லிவிட்டார்கள். இம்மாதிரிதான் அவ்வூர் வழியே ஓடும் பஸ்காரர்களிடமிருந்தும், வண்டி ஓட்டுகிறவர்களிடமிருந்தும் வரி வசூல் செய்தார்கள். இந்தக் காரியங்களுக்கே வானர சேனை தன் முழு பலத்தையும் உபயோகிக்கும்படி இருந்தது. ஆனால் சர்க்கார் நடத்தியவர்களுக்கு அனுபவம் கிடையாது. வரவைவிடச் செலவுதான் அதிகமாக இருந்தது. கிருஷ்ணகுமாரி போட்டுக் கொண்டிருந்த நகைகளை யெல்லாம் விற்றுப் பணத்தைக் கொடுத்தாள். அது எத்தனை நாளைக்கு வரும்?

சர்க்காரைத் திருத்தி அமைத்தார்கள். சாரங்கனுக்கு நிதி மந்திரிப் பதவியும், பிரசார இலாகாத் தலைமைப் பதவியும் கொடுக்கப்பட்டது. ராஜு உணவு மந்திரி. கிருஷ்ணகுமாரியை ஏகமனதாகக் குடியரசின் தலைவியாகத் தேர்ந்தெடுத்தார்கள். சாரங்கன் கேட்டுக் கொண்டபடி யுத்த இலாகாவும் அவன் மேற்பார்வையில் விடப்பட்டது.

சாரங்கன் எல்லோரையும் ஒரு பிரதிக்ஞை செய்யச் சொன்னான். "நான் ஒரு பைசாவைச் செலவு செய்வதற்குமுன் அது அவசியந்தானா என்று நெஞ்சைத் தொட்டுப் பார்ப்பேன். ஐந்து மைல்களுக்கு உட்பட்ட இடங்களுக்குக் கால் நடையாகவே செல்வேன். என் வஸ்திரங்களை நானே தோய்த்துக் கொள்வேன். என்னால் செய்யக்கூடிய காரியங்களைப் பிறரைச் செய்யச் சொல்ல மாட்டேன். உணவில் ஒரு பிடிகூட எறிய மாட்டேன். காலையில்

காப்பி சாப்பிட மாட்டேன்!'' என்பது தான் அது.

கிருஷ்ணகுமாரி, கடைசி ஷரானை விலக்கிவிட வேண்டும் என்று கேட்டுக் கொண்ட போதிலும், சாரங்கன் பிடிவாதமாக மறுத்துவிட்டான்!

வானர சேனை போலீஸ் படையாக மாற்றப்பட்டது. ஊரில் அப்போது திருட்டு அதிகமாயிருந்தது. தன் சர்க்காரின்மேல் பழியைப் போட்டுவிட்டு, கொள்ளைக்காரர்கள் ஏகதேசமாகத் தங்கள் தொழிலை நடத்திக் கொண்டிருந்தார்கள். ஐந்தாறு பேர்களைக் கையும் மெய்யுமாக வானர சேனை பிடித்து விட்டது. அவர்கள் தலைவர்முன் விசாரணைக்குக் கொண்டு வரப்பட்டார்கள். குற்றத்துக்குத் தண்டனையாக அவர்கள் சொத்து முழுவதும் பறிமுதல் செய்யப்பட்டது. முடிந்த மட்டும் சொத்தை இழந்தவர்களிடம் திருப்பிக் கொடுத்து விட்டார்கள்.

ஆனால் வானரசேனை தன் முழுத் திறமையையும் கள்ள மார்க்கெட் வியாபாரிகளைப் பிடிப்பதில் காண்பிக்க வேண்டியிருந்தது. சிவனேரியில் பிரிட்டிஷ் சர்க்கார் தொந்தரவு இல்லையென்று பலர் கதர் கட்டிக் கொண்டு, "தனி சர்க்காருக்கு ஜே!'' என்று கோஷமிட்டுக் கொண்டு, சர்க்கரையையும் அரிசியையும் மூட்டை கட்டி வைத்திருந்தார்கள். மிகச் சிரமப்பட்டு வானர சேனை அவர்களைப் பிடித்து விட்டது. சாரங்கனும் கிருஷ்ணகுமாரியும் அவர்கள் விஷயத்தில் தயை காண்பிப்பது பிசகு என்று, அவர்கள் வைத்திருந்த சாமான் எல்லாவற்றையும் பறிமுதல் செய்ததுமன்றி, அவர்கள் ஒவ்வொருவரையும் வயல்களைக் கொத்துவதற்கும், கிணறுகள் வெட்டுவதற்கும் நியமித்து விட்டார்கள்!

"ஏ, ஆறு மூட்டை சர்க்கரை! என்னப்பா நிற்கிறே? போடு மம்மட்டியைப் பலமா!'' என்று குரல்கள் அடிக்கடி காதில் விழுந்தன. பறிமுதல் செய்து கொண்டு வரப்பட்ட அரிசியையும் சர்க்கரையையும் பார்த்த சாரங்கன் மலைத்துப் போய் விட்டான். "பொன் விளைந்தாலும், இம்மாதிரி ஆசாமிகள் இருக்கும் வரையில் நம் நாட்டை விட்டுப் பஞ்சம் போகாது!'' என்று சொல்லிக் கொண்டான்.

அவ்வூருக்குத் தேவையான அரிசியையும் சர்க்கரையையும் வைத்துக் கொண்டு பாக்கியை விற்றதில், தனி சர்க்காரின் பொருளாதார நிலைமை திடமென்று அபிவிருத்தி அடைந்தது. முதலில், துணிக்குக் கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனால் வானர சேனை நான்கு கைத்தறிகளையும், அதற்கு வேண்டிய ஆட்களையும் கையோடு கொண்டு வந்த பிறகு துணிப் பஞ்சம் பறந்தோடியது. அந்த ஊர் தச்சனைக் கொண்டு சாரங்கன் நூறு சர்க்காக்களைச் செய்தான். பிறகு ஒரு வகுப்பு நடத்தி அவ்வூர்ப் பெண்களுக்கு நூல் நூற்கக் கற்றுக் கொடுத்தான். முதலில் பக்கத்துக் கிராமங்களிலிருந்து பஞ்சு வாங்கும்படி இருந்தது. கொஞ்ச நாளில் அதையும் பயிர் செய்து கொண்டார்கள்.

சாகுபடி விஷயத்தில் சாரங்கன் பல மாறுதல்களைச் செய்தான். அநேகமாக, பணமும் நிலமும் அதிகம் இருந்தவர்கள் பயத்தில் ஊரைவிட்டு ஓடிப்போய் விட்டார்கள். தனி சர்க்காருக்கு இது மிகவும் சௌகரியமாகப் போய்விட்டது. பழைய பட்டாக்களையெல்லாம் ரத்து செய்து விட்டு, சாரங்கன், நிலங்களை மறுபடியும் பட்டுவாடா செய்தான். ஒவ்வொருவருக்கும் ஒன்றரை வேலி நிலம் கொடுக்கப்பட்டது. ஆனால் சாரங்கன் கொடுக்கும் போதே, "இந்த நிலம் சர்க்காருடையது. உங்களிடம் சாகுபடிக்குத்தான் விட்டிருக்கிறார்கள். ஒவ்வொருவரும் சர்க்காருக்கு நூற்றைம்பது கலம் அளந்து கொடுக்க வேண்டும்; தவறினால் நிலம் வேறு ஒருவரிடம் கொடுக்கப்படும்'' என்று சொல்லிவிட்டான்.



நிலம் வாங்கிக் கொண்டவர்கள் அதில் வேலை செய்ய வேண்டும் என்றும் நிபந்தனை விதிக்கப்பட்டது. இந்த ஏற்பாட்டினால் நிலவரி ரத்து செய்யப்பட்டது. ராஜூவும் கிருஷ்ணகுமாரியும் "பணம்

இல்லாமல் சர்க்காரால் ஒன்றும் செய்ய முடியாது; ஆகையால் வாரத்துக்குப் பதிலாக வரி இருக்க வேண்டும்” என்று விவாதித்தார்கள். ஆனால் சாரங்கன் நெல்லும் அரிசியும் கிராக்கியாயிருக்கும் இந்த நாளில் பண்ட மாற்றுத்தான் லாபகரமானது என்றும், இன்னும் ஒரு வருஷத்தில் தங்கள் செல்வாக்கு நிலைத்ததும் தனி சர்க்காரே நாணயம் போடலாம் என்றும் சொல்லித் தான் செய்ததையே ஸ்தாபித்து விட்டான். இந்த ஏற்பாட்டினால் ஊரில் பசி இல்லை; பங்கீட்டு முறையினால் சர்க்கார் தானியத்தை மீதப்படுத்த முடிந்தது. பக்கத்துக் கிராமங்களில் அதற்குப் பதிலாக வேறு பொருள்களை வாங்கிக் கொண்டார்கள்.

ஒரே வருஷத்தில் தனி சர்க்காரின் செல்வாக்கு உயர்ந்தது. அடுத்திருந்த மூன்று கிராமங்கள் அவர்கள் ஆதிக்கத்திற்குள் தானாகவே வந்தன.

ஆனால், அணைவதற்கு முன் விளக்கு சுடர் விட்டு எரிகிறதல்லவா?

## பதினான்காம் அத்தியாயம்

## முடிவின் ஆரம்பம்

“நம் சர்க்கார் இப்பொழுது ஜோராகத்தான் நடக்கிறது. ஆனால் போன வருஷம் நம்மைப் பற்றி நாலு பேர் பேசிக் கொண்டிருந்தார்கள். பிரிட்டிஷ் சர்க்காரும் நம்மேல் கவனத்தைச் செலுத்திற்று. இப்போது நாம் இருக்கிறோமா, செத்துப் போய்விட்டோமா என்று கேட்பாரைக் கூடக் காணோம்!” என்றான் கிருஷ்ணகுமாரி ஒருநாள்.

“ஆமாம், சொண்டி நடந்தால்தானே நாலு பேர் பார்க்கிறார்கள்?” என்றான் சாரங்கன் பரிகாசமாக.

“எனக்கென்னமோ நாம் இப்பொழுது சொண்டியினால் தேவலை என்று தோன்றுகிறது. எல்லோருக்கும் தெரிய வேண்டாமா, நாம் செய்வது? அப்பொழுதானே நமது இயக்கம் பலமடையும்?” என்று விடாமல் கேட்டான் கிருஷ்ணகுமாரி.

“நமது பிரசார இலாகாவைத் தட்டி எழுப்பி ஒரு கப் காப்பி கொடுத்தால் அது வேலை செய்தாலும் செய்யும். நமது நிதி மந்திரிதான் காப்பியை ‘பாய் காட்’ பண்ணி விட்டாரே!” என்றான் ராஜு.

சாரங்கனும் இவ்வளவு நாள் அதைப் பற்றி யோசிக்காமலில்லை. முதலில் அஸ்திவாரத்தைப் பலப்படுத்திக் கொண்டு பிறகு மாடி கட்டலாம் என்று அவன் நினைத்தான். அதைத்தான் இப்பொழுதும் சொன்னான்.

“நீங்கள் சொல்வதில் உண்மை இருக்கிறது. ஆனால் நாள் ஆக ஆக நம் சேனை சுக வாழ்வில் லயித்துப் போய் ஊக்கத்தைக் கைவிட்டாலும் விடலாம். கூட்டோடு கூடாகப் பிரசார வேலையையும் செய்ய வேண்டியதுதான்!” என்றான்.

“நாளைக்கே ஆரம்பித்து விடுகிறேன். ஆனால் இதை மட்டும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இது வரையில் நம்மை மடக்க பிரிட்டிஷ் சர்க்கார் முழு பலத்தையும் உபயோகிக்கவில்லை. ஏன்? அவர்களுக்கு நாம் செய்வது அவ்வளவு பிரமாதமாகப் படாததால்தான். பெரிய சாம்ராஜ்யத்தில் நாலு கிராமங்கள் எந்த மூலை? ஆனால், நாம் பிரசாரத்தை ஊக்கத்துடன் செய்ய ஆரம்பித்தால் அரசாங்கம் விழித்துக் கொள்ளும். எங்கே இது காட்டுத் தீ மாதிரி பரவி விடுமோ என்று பயந்து, தன் முழு பலத்தையும் கொண்டு

### என்ன பிரயோஜனம்?



இடறி விழுவதற்காகக் குழிகள் தோண்டி அவற்றின் அருகில் குழந்தைகளை விளையாட விடுவோமா? விட்டால், குழந்தைகள் கட்டாயம் குழியில் விழுந்து காலை ஒடித்துக் கொள்வார்கள். அதைப் போல, நாடு நகரங்கள் எல்லாவற்றிலும் கள்ளும் சாராயமும் விற்கவும் வாங்கவும் வசதிகள் ஏற்படுத்திவிட்டு, குடிக்க வேண்டாமென்று ஜனங்களிடம் சொல்லுவதில் பிரயோஜனம் இல்லை.

—ராஜாஜி.

நம்மைத் தாக்கும். அதற்கு நாம் தயாரா?" என்று கேட்டான் சாரங்கன்.

"தயார்!" என்று அங்கிருந்தவர்கள் எல்லோரும் ஒரே சமயத்தில் சொன்னார்கள்.

அன்று முதல் சாரங்கன் தன் முழு கவனத்தையும் பிரசார வேலையில் திருப்பினான். வானர சேனையிலேயே மிகவும் திறமை யுடையவர்கள் என்று பெயர் பெற்ற பத்துப் பேரை 'ஐந்தாம் படை'யாக ஆக்கினான். இவர்களுக்கு, பக்கத்துக் கிராமங்களுக்குச் சென்று ஜனங்களிடம் பிரிட்டிஷ் சர்க்கார் இன்னும் கொஞ்ச நாளில் கவிழ்ந்து விடுமென்றும், அந்திய காலத்தில் விழப் போகும் உத்தரத்தில் தொங்கிக் கொண்டிருந்தால் ஆபத்துத்தான் வருமென்றும் வதந்திகளைப் பரப்புவதுதான் முக்கியமான வேலை. மேலும், போலீஸ்காரர்கள் எங்கு எங்கு இருக்கிறார்கள், அவர்கள் மன நிலை எப்படி யிருக்கிறது என்று வேவு பார்ப்பதும் இன்னொரு வேலை. சமயமும் சந்தர்ப்பமும் சரியாக இருந்தால், போலீஸ்காரர்கள், பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள் இவர்கள் மனதில் அதிருப்தியைக் கிளப்பி, மற்றொரு இயக்கத்தின்போது அவர்கள் நடுநிலைமை வகிக்கும்படியாகச் செய்வதும் இன்னொரு கூட்டத்தின் அலுவல். இன்னும், வானர சேனையைச் சேர்ந்த இருநூறு வீரர்களை—இவர்கள் எதற்கும் துணிந்தவர்கள்—பக்கத்துக் கிராமங்களுக்கு அனுப்பி, ஜனங்களிடம், "சர்க்காருக்குத் தானியங்களைக் கொடுக்காதீர்கள்! அவர்கள் ஆட்களை அனுப்பிப் பலவந்தமாக எடுத்துப் போக முயற்சித்தால், நாங்கள் தாக்குகிறோம் அவர்களை!" என்று பறை சாற்றவும் செய்தான் சாரங்கன்.

பம்பாயில் இருந்த காங்கிரஸ் ரேடியோவைப்போல் சிவனேரியிலும் ஒரு சுதந்திர ரேடியோ நிலையம் ஏற்படுத்த வேண்டுமென்று கிருஷ்ணகுமாரி மிகவும் ஆசைப்பட்டாள். ஆனால் மின்சார வசதி யில்லை; ரேடியோவுக்கு வேண்டிய சாமான்களை வரவழைக்க முடியவில்லை. அதற்குப் பதிலாக, வெளியூர்களுக்கு லைஸின்களில் ஆட்களை அனுப்பி, தெரு மூலைகளில் பிரசங்கங்கள் செய்வதற்குச் சாரங்கன் ஏற்பாடுகள் செய்தான்.

இம்மாதிரி மூன்று மாதம் பிரசார வேலை மும்முரமாக நடந்தபோதிலும், பிரிட்டிஷ்காரர் ஒருவித நடவடிக்கையும் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை.



மது அரக்கன் :— அரசனாயினும் ஆண்டியாயினும் குடியர்கள் எப்பொழுதும் என்னுடைய அடிமைகளே!

கிருஷ்ண குமாரியால் இந்த அலட்சியத்தைப் பொறுக்க முடியவில்லை.

"என்ன சாரங்கன்! நீங்கள் என்னமோ பயந்து ஒண்டிக்கொண்டு இருந்தீர்களே, நாம் மூச்சு விட்டால் வந்து நம்மேல் விழுந்து விடுவார்களென்று! ஒரு இழவையும் காணோமே!" என்றாள்.

"நமக்கு எது முக்கியம்? பிரிட்டிஷ் சர்க்கார் நம் மீது பாய்வதினால் ஏற்படும் ஆத்ம திருப்தியா, அல்லது நம் பிரசாரம் செழிக்கப் பரவுவதா? இப்போது பிரிட்டிஷ் சர்க்கார் தூங்கினால் நமக்குத்தானே லாபம்? இன்னும் ஒரு வருஷத்தில் இதைப்போல் பத்து ஊர்களில் தனி சர்க்கார் ஸ்தாபித்து விடலாம்" என்றான் சாரங்கன்.

"அப்படியென்றால் ஒவ்வொரு ஊராகத் தனி சர்க்கார் ஸ்தாபித்துக் கொண்டே போவதுதான் நமது வேலையா? அது இந்த யுகத்தில் முடியுமா? நம் எண்ணம் சித்தியாவதற்கு வழி அது அல்ல. சுதந்திரத் தீயை வளர்ப்பதற்கு நாம் அக்கினியில் விழுந்தாக வேண்டும். நாம் போனாலும் நம் பெயர் நிலைத்து நிற்கும். நாம் உயிரோடு இருப்பதை விடப் போரில் இறப்பது நாட்டுக்குப் பெரிய சேவையாக இருக்கலாம்" என்று பேசின கிருஷ்ணகுமாரி யுத்தத்துக்குத் துடிக்கிறான் என்பது சாரங்கனுக்கு விளங்கிற்று.



மரண தேவதை:— குடியுங்கள், குடியுங்கள், நன்றாகக் குடியுங்கள்! ஓயாமல் ஒழியாமல் குடியுங்கள்! வெகு சீக்கிரத்தில் என் திருவடியை அடைவதற்கு அதுவே வழி!

சிறிது நேரம் அறையில் மௌனம் நிலவியது. மறுபடியும் கிருஷ்ணகுமாரிதான் பேசினான்:

"பிரிட்டிஷ்காரர்கள் ஏன் சும்மா இருக்கிறார்கள்? நாம் இதுவரையில் சில்லறை ஆசாமிகளைத்தான் பிரசாரத்துக்கு அனுப்பியிருக்கிறோம். அவர்கள் பேச்சு ஒன்றும் செல்லாது என்று பிரிட்டிஷ்காரர்களுக்குத் தெரியும். 'நாய் கத்துகிறது, சூரியன் பிரகாசிக்கிறது' என்று அவர்கள் சும்மா இருக்கிறார்கள். நான் சொல்வதைக் கேளுங்கள்: நாளைய தினம் நான் போகிறேன் காவிரிப்பாக்கத்துக்கு. நம் சாரணர்களை அனுப்பிச் சாயந்திரம் ஐந்து மணிக்குப் பொதுக் கூட்டம் காவேரி மணலில் நடக்கும் என்று தண்டோராப் போடச் சொல்லுங்கள்! பார்க்கலாம், இந்த பிரிட்டிஷ் புலிகள் சும்மா இருக்கின்றனவா என்பதை!"

* * *

கிருஷ்ணகுமாரி நினைத்தபடி பிரிட்டிஷ் சர்க்கார் தூங்கிக் கொண்டிருக்கவில்லை. தனி சர்க்காரின் செல்வாக்கு கிராமத்துக்கு கிராமம் பரவுவதை அவர்கள் விரும்பவேயில்லை. அதிலும் ஊழலில்லாத நிர்வாகம் ஓரிடத்தில் நடக்கிறதென்றால் அவர்களால் எப்படிப் பொறுக்க முடியும்?

கைதேர்ந்த 'ஸி. ஐ. டி.'க்காரர்களை அந்தப் பக்கத்துக்கு அனுப்பியிருந்தார்கள். தவிரவும், மிலிடெரிக்காரர்கள் — ஸிவில் உடையில் — ஜாம் ஜாம் என்று அந்தப் பக்கத்தில் குழுமியிருந்தார்கள். அவர்கள் சில்லறை ஆசாமிகளை அரஸ்டு செய்தோ, துன்புறுத்தியோ இயக்கத்தின் தலைவர்கள் தப்புவதற்கு அவகாசம் கொடுக்க விரும்பவில்லை. தனி சர்க்காரில் மிகவும் முக்கியமானவன் என்று அவர்கள் கருதிய கிருஷ்ணகுமாரியைச் சிறை பிடிக்கத்தான் காத்திருந்தார்கள்.

அன்றைய தினம் கிருஷ்ணகுமாரி காவேரி மணலில் பேசப்போகிறான் என்பதைக் கேள்விப்பட்டவுடன் ஸ்பெஷல் போலீஸ் இன்ஸ்பெக்டர் அகமகிழ்ந்தார். "சரி, இன்று சிக்கியது பட்சி!" என்று நினைத்தார். தன்னுடன் இருப்பவர்களைக் காவேரி மணலில் ஐந்து மணிக்கு ஆஜராயிருக்கும்படி உத்தரவிட்டார். போலீஸ் உடை போட்டுக்கொள்ள வேண்டாமென்றும், ஆனால் கைத் துப்பாக்கியைத் தயாராய் வைத்திருக்க வேண்டும் என்றும் சொன்னார். கூட்டத்தோடு கூட்டமாக இவ்வாறு இரு நூறு ஆசாமிகள் சரியான இடங்களில் நின்று கொண்டிருந்தார்கள்.

கிருஷ்ணகுமாரி சரியாக ஐந்து மணிக்கு அக்கூட்டத்தில் பேச எழுந்தவுடன் அந்த ஜனசமுத்திரம் அலையில்லாத கடல்போல்

நிம்மதியா யிருந்தது. “சகோதர, சகோதரிகளே! நான் இன்று உங்கள் முன் பகிரங்கமாகப் பேச முன் வந்தது, நாங்கள் பிரிட்டிஷ்காரர்களுக்குப் பயந்து கிடக்கும் பதர்களல்ல என்பதை நிருபிப்பதற்குத்தான் ...!”



கூட்டத்தில் திடீரென்று கலவரம் ஏற்பட்டது. வானர சேனையைச் சேர்ந்த ஒருவன் ஒரு மிலிடெரி ஆசாமி கையிலிருந்த ரிவால்வரைப் பார்த்துவிட்டான். அதைப்பிடுங்க யத்தனித்தபோது பக்கத்திலிருந்த மிலிடெரிக்காரர்கள் அவன் மேல் பாய்ந்தார்கள். கிருஷ்ணகுமாரிக்கு இந்த விஷயம் சட்டென்று புரியவில்லை. கூட்டத்தில் கலவரம் செய்கிறார்களே என்று கோபம்தான் வந்தது. தான் அமைதியாக நிற்பது எல்லோருக்கும் தெரிய வேண்டுமென்று மேஜை மேல் ஒரு நாற்காலியைப் போட்டுக்கொண்டு அதன் மேல் ஏறி நின்றாள்.

இதற்குள் கலவரம் அதிகமாகி விட்டது. போலீஸ் இன்ஸ்பெக்டர் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போய்விடப் போகிறதே என்று கைத்துப்பாக்கியை எடுத்தார். “அவளைக் கைதியாக்கிக் கொண்டு வந்தாலென்ன, சுட்டுக் கொன்றாலென்ன? இரண்டுக்கும் ஒரே பிரமோஷன்தான்!” என்று நினைத்தார் இன்ஸ்பெக்டர்.

அவ்வளவுதான்; ‘பட்’ என்று ஒரு குண்டு பறந்தது.

நாற்காலியின் மேல் நின்று கொண்டிருந்த கிருஷ்ணகுமாரி தடாலென்று தரையில் விழுந்தாள். (தொடரும்)

* • *

# நிழலும் போகக்கூடாது!






# மிகவும் ருசிகரமானது இது நல்லது

போர்ன்-வீடாவில் 95 சதவிகிதம் எலும்பு வளர்ச்சிக்கும் ஜீவசக்தி யளிப்பதற்குமான சரக்குகள் இருக்கின்றன. தவிர அது ருசியாகவும் ஜீர்ணத்துக்கு தூண்டுகோலாகவும், எளிதில் ரத்தத்துடன் சேர்ந்து புஷ்டிதருவதாகவும் இருப்பதால் குறிப்பாக கர்ப்பிணிகளுக்கும் வியாதிக்குப்பின் குணமடையும் தருவாயிலும் இன்றியமையாத உணவாக விளங்குகின்றது.

காட்பரீஸ்

# போர்ன்-வீடா

காலிஷியம் விடமின்கள் நிறைந்தது

சப்ளைகள் கிடைக்காவிட்டால் எழுதவும்.

காட்பரி-ப்ரை(எக்ஸ்போர்ட்) லிட், (Dep' 22 தபால் பெட்டி 1417-பம்பாய்.

# கனவு நனவாகிறது!

குடிகாரன் நன்றாகக் குடித்துவிட்டு, அந்தப் போதையில் தன்னுடைய மனைவி மக்கள் சௌக்கியமா யிருப்பதாக இன்பக் கனவு காண்கிறான்.........




ஆனால், அந்தக் கனவு அவன் குடியை நிறுத்திய பிறகே நனவாகிறது!




சீரிலை வேளையில் ஒரு இந்திய ரோஜா தோட்டத்திலே ஏற்படக் கூடிய குதூகல உணர்ச்சியை விநோலியா ஒயிட் ரோஸ் சோப் உங்களுக்குத் தருகிறது. இச் சோப்பின் மிருதுவான செழிப்பாயுண்டாகும் நுரை மிகவும் நேர்த்தியான சருமத்தையும் ஒழுங்காக சுத்தம் செய்கிறது—மேலும் அதன் நறுமணம் உங்களைச் சுற்றிலும் மனோஹர பரிமளத்தைப் பரவச் செய்கிறது. உங்கள் அழகை அதிகப்படுத்த இச் சோப்பைவிட மேன்மையானதோ, தகுதியானதோ வேறு கிடையாது. விநோலியா ஒயிட் ரோஸை உங்கள் இஷ்டத்திற்குரிய சோப்பாகக் கொள்ளுங்கள்.

# விநோலியா ஒயிட் ரோஸ் சோப்

VW. 15-49 TM

VINOLIA CO., LIMITED LONDON, ENGLAND

# விமோசனம்

ஸோமாஸ்

அக்கயற்கண்ணி அசையாமல் கற்சிலை மாதிரி தெருக் கோடியைப் பார்த்த வண்ணம் வாசலில் உட்கார்ந்திருந்தாள். சூரியன் அஸ்தமனம் ஆகி மாலை வெளிச்சமும் மங்கிக் கொண்டே வந்தது. வெளிச்சம் குறையக் குறைய அவள் மனத்திலும் நம்பிக்கையென்னும் வெளிச்சமும் குன்ற ஆரம்பித்தது. காரணம் வேலைக்குப் போன அவள் புருஷன் வெகு நேரம் ஆகியும் வீடு திரும்பாததுதான்.

அவள் புருஷன் துரைசாமியோடு ஆலையில் வேலை செய்யும் தொழிலாளர்களெல்லாம் வீட்டுக்கு வந்து விட்டனர். ஆனால் துரைசாமியை மட்டும் காணவில்லை.

அக்கயற்கண்ணியின் கண்களில் நீர் மல்கியது.

"ஒரு வேளை மறுபடியும்......சீ! அப்படியும் இருக்குமா?...... பின்னே இவ்வளவு நேரம் ஆகியும் அவர் வீட்டுக்கு வராத காரணம்?"

இந்த நினைப்பு ஓட்டத்தில் எல்லையற்ற தூரம் பிரயாணம் செய்த அக்கயற்கண்ணி தன் நினைவற்ற சிந்தனாலோகத்தையடைந்தாள்.

* * *

துரைசாமி ஓர் ஆலைத் தொழிலாளி. அவன் வீடு திரும்பும் நேரம் நெருங்கும் சமயத்தில், வீட்டு வாசலில் ஆவல் நிறைந்த கண்களோடு அவனுடைய அருமை மனைவி அக்கயற்கண்ணி காத்து நிற்பாள். அவனும் அடங்காத ஆர்வத்துடன், தன் 'வழி மேல் விழி' வைத்து நிற்கும் அக்கயற்கண்ணியையே பார்த்துக் கொண்டு வருவான்.

துரைசாமியின் சொற்ப சம்பளத்தைக் கொண்டு அக்கயற்கண்ணி மிகவும் சாமர்த்தியமாகக் குடித்தனத்தை நடத்திவந்தாள். துரைசாமி வீட்டுக் கவலையே யில்லாமல் 'தான் உண்டு, தன் வேலை யுண்டு' என்று இருந்து வந்தான். இத்தகைய எளிய வாழ்க்கையிலும் அவர்கள் எவ்வளவு ஆனந்தமாயிருந்தார்கள்!

துரைசாமி தன் குடும்ப நிலையையும் பொருட்படுத்தாமல் குழந்தை முருகன் கேட்டதையெல்லாம் வாங்கிக் கொடுத்து அவனைத் தன் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்து வந்தான். முருகனை நல்ல பையனாக, புத்திசாலிப் பையனாக, வளர்க்க வேண்டும் என்பது அவனது அத்யந்த ஆசை. அவனுக்குத்தான் சின்ன வயதில் படிக்க முடியாமல் போய் விட்டது. முருகனாவது படித்து முன்னுக்கு வரவேண்டும் என்பதில் அவனுக்கு இருந்த ஆசை கொஞ்ச நஞ்சமல்ல.

முருகனுக்குப் பத்து வயது ஆயிற்று. படிப்பில் மிகவும் அக்கறையுள்ளவனாக விளங்கினான் முருகன். அவனுடைய நல்ல குணங்களைப் பற்றித் தன் நண்பர்கள் புகழ்ந்து பேசுவதைக் கேட்கும்போது துரைசாமி பூரித்துப் போவான்.

அக்கயற்கண்ணிக்கும் இது ஆனந்தமாகத்தான் இருந்தது. ஆனால் அவர்களது ஆனந்த வாழ்க்கை ஆண்டவனுக்கே பொறுக்கவில்லை போலும். குதூகலமாகச் சென்று கொண்டிருந்த அவர்களது வாழ்க்கைப் படகு நாளடைவில் தத்தளிக்க ஆரம்பித்தது. காரணம் துரைசாமி தன் குடும்பத்தினிடம் காட்டி வந்த அக்கறை குறைய ஆரம்பித்ததுதான்.

துரைசாமியின் இந்த விபரீதப் போக்கு வரவர அதிகமாகி வந்தது. ஆலையை விட்டவுடன் முன்பெல்லாம் நேரே வீட்டுக்கு வந்து கொண்டிருந்த துரைசாமிக்கு இப்போது வழியில் எவ்வளவோ காரியங்கள் இருந்தன. இரவு நேரங் கழித்துத்தான் அவனால் வீட்டுக்கு வர முடிந்தது.

முன்பெல்லாம் துரைசாமி அன்பும் ஆதரவும் நிறைந்த குரலில் அக்கயற்கண்ணியையும், முருகனையும் அழைத்துக் கொண்டே வீட்டுக்குள் நுழைவான். அதற்கு நேர்மாறாக இப்பொழுது குனிந்த தலை நிமிராமல் விர்ரென்று உள்ளே நுழைந்தான். அவன் யாருடனும் ஒரு வார்த்தை கூடப் பேசுவதில்லை. சதா சர்வ காலமும் அவன் முகத்தில் வெறுப்பும் ஆத்திரமும் தாண்டவமாடின. உடம்பும் வரவர இளைத்துக் கொண்டே வந்தது.

வீட்டுச் செலவுக்காக அக்கயற்கண்ணியிடம் கொடுக்கும் தொகையையும்

அவன் வரவரக் குறைத்துக் கொண்டே வந்தான். கடையில் பணம் கொடுப்பதையே நிறுத்திவிட்டான். இதனால் அங்கயற்கண்ணி அருப்பாடு படவேண்டி வந்தது; குடும்ப நிர்வாகப் பொறுப்பு முழுவதும் அவள் தலையில் விழுந்தது; நாலு வீட்டில் வேலை செய்தும், ஆலைத் தொழிலாளர்களுக்குச் சாப்பாடு எடுத்துச் சென்றும் குடும்பத்தை நடத்த வேண்டிவந்தது.

தன் குடும்பம் இவ்வளவு சீர்கேடான நிலையை அடைந்தும் அவள் தன் புருஷன் மீது ஆத்திரம் கொள்ளவில்லை; அநுதாபமே கொண்டாள். அவனுக்கு உடம்பு சரியில்லாததனால்தான் இப்படியெல்லாம் நடந்து கொள்ளுவதாக அவள் நினைத்தாள்.

ஒரு நாள் துரைசாமி முருகனுக்கு ஒரு கண்டிப்பான கட்டளை இட்டான். ஊருக்கு வடக்குக் கோடிப் பக்கம் எந்தக் காரணம் கொண்டும் அவன் போகக் கூடாது என்பதுதான் அக் கட்டளை. ஏற்கெனவே பயந்த சுபாவமுள்ள முருகனுக்கு இம் மாதிரிக் கட்டளையும் பிறப்பித்து விட்டால் கேட்கவா வேண்டும்?

இப்படியெல்லாம் நடந்து கொள்ளும் துரைசாமியின் புத்தி மாறாட்டத்துக்குக் காரணம் ஏதாவது தெய்வக் குற்றமாயிருக்குமோ என்று நினைத்து, அங்கயற்கண்ணி மாரியாத்தாளுக்குப் பொங்கலிட்டுப் பூசையும் போட்டாள்.

அக்கம் பக்கத்திலுள்ள பெண்களுக்கெல்லாம் அங்கயற்கண்ணியிடம் அளவு கடந்த அநுதாபம் உண்டாயிற்று. புருஷனின் வழி தவறின நடத்தையின் உண்மையை யறியாத அவளது கள்ளங்கபடமற்ற சுபாவம் அவர்களுக்கெல்லாம் ஆச்சரியத்தை யளித்தது.

ஆனால் துரைசாமியின் புத்தி மாறாட்டத்துக்கு உண்மையான காரணம் இன்னதென்பதை அவளிடம் சொல்ல ஒருவரும் துணியவில்லை. அப்படியே அவர்கள் சொல்லியிருந்தாலும் அவள் நம்பியிருக்க மாட்டாள். புருஷனிடம் அவ்வளவு நம்பிக்கை அவளுக்கு.

ஆனால் அந்த நம்பிக்கைக் கோட்டை அன்று மாலையே



"ஒரு வேளை ! மறுபடியும்... சீ, அப்படியும் இருக்குமா?"

தகர்த்துவிட்டது. அப்பொழுது ஆறு மணி யிருக்கும். துரைசாமியும் அவன் நண்பனும் ஏதோ பேசிக்கொண்டே வீட்டு வாசலுக்கு வந்தனர்.

துரைசாமியின் நண்பன் உரத்த குரலில், நாக் குழற "எய், துரைசாமி! நான் தாஜ் மஹாலை வாங்கப்போறேண்டா!" என்றான்.

அதற்குத் துரைசாமி, "போடா, முட்டாள்! நான் அதை விற்கப் போறதில்லே!" என்று உளறிக் கொட்டினான்.

இதைக் கேட்ட அங்கயற்கண்ணிக்குத் 'திகீர்' என்றது. "இந்தக் கொடிய பழக்கத்துக்கு நீங்கள் எப்படி ஆளானீர்கள்? கள்ளுக் குடிப்பது மகா பாவமில்லையா? நேற்றுக்கூட அந்தக் காங்கிரஸ்காரர் அப்படித்தானே பிரசங்கத்திலே சொன்னார்?" என்று கண்ணீர் பெருகக் கேட்டாள் அங்கயற்கண்ணி.

துரைசாமி ஒரு அட்டகாசச் சிரிப்புச் சிரித்துவிட்டு, "அவன் கிடக்கிறான், முட்டாள்! குடி வெறியிலே அப்படிப் பேத்தி யிருப்பான்! அதை நீ பெரிசாச் சொல்ல வந்துட்டியே!" என்று சொல்லிக் கொண்டே நிற்க முடியாமல் கீழே விழுந்து விட்டான்.

இந்தச் சமயத்தில் வெளியே சென்றிருந்த முருகன் ஓடோடியும் உள்ளே வந்து, "அம்மா, அம்மா! இன்றைய தினம் நம்ம தெருப் பையன்களோடு நான் விளையாடப் போயிருந்தேன். ஊருக்கு வடக்குக் கோடிக்குப் போய் விளையாடினோம், அப்பா என்னை அந்தப் பக்கம் போகக் கூடாது என்று சொல்லி யிருந்தார். நான் ஆனமட்டும் அங்கே வரமாட்டேனீ என்று சொன்னேன். பையன்களெல்லாம் ஒரேயடியாய்ச் சிரிக்க ஆரம்பித்துவிட்டான்கள். 'அங்கே ஒரு பெரிய கள்ளுக் கடை இருக்கிறது. உங்க அப்பன் தினம் அந்தக் கடைக்குத்தான் வந்து குடிக்கிறான். அது உனக்குத் தெரியக் கூடாது என்றுதான் உன்னை இங்கே வரக்கூடாது என்று அவன் சொல்லியிருக்கிறான்' என்று ஒரு பையன் சொன்னான். அதற்கேற்றாற்போல் கொஞ்ச நாழிகைக்கெல்லாம் அப்பா கையிலே கள்ளுக் கலயத்தோடு தள்ளாடிக் கொண்டே அங்கு வந்தார். அவரைப் பார்க்க எனக்குப் பயமாயிருந்தது, அம்மா! ஓடி வந்து விட்டேன்!" என்று விம்மிக் கொண்டே முருகன் சொன்னான்.

அங்கயற்கண்ணி இதைக் கேட்டதும் இன்னும் கதறிவிட்டாள்.

குடி மயக்கம் தெளிந்து எழுந்த துரைசாமிக்குத் தன் மகனையும் மனைவியையும் தலை நிமிர்ந்து பார்க்கவே உள்ளம் கூசியது. முழங்காலைக் கட்டிக்கொண்டு விசித்து விசித்து அழுதான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு, அவன் அங்கயற்கண்ணியிடமும் முருகனிடமும் தான் கள்ளுக்கடைப் பக்கமே இனிமேல் போவதில்லை யென்று ஆயிரம் சத்தியம் செய்தான். ஆனாலும் அங்கயற்கண்ணியின் மனம் சமாதானமடைய வில்லை. அவனைத் தினசரி சந்தேகக் கண்கொண்டே பார்த்து வந்தாள்.

* * *

"கண்ணு, ஏன் இப்படி மாமல்லபுரத்துச் சிலை மாதிரி உட்கார்ந்திருக்கே? ஏன் இந்தக் கண்ணீர்" என்று சிறிது நேரம் கழித்து வீடு திரும்பிய துரைசாமி கேட்ட பிறகுதான் அங்கயற்கண்ணி தன் சுய நினைவை யடைந்தாள்.

உடனே அவள் கண்ணைத் துடைத்துக் கொண்டு, "ஒண்ணுமில்லே, வாங்க! வெகு நேரம் ஆகியும் இன்னைக்கு நீங்க வராம இருந்திடவே, எனக்குச் சந்தேகம் உண்டாகிவிட்டது. மறுபடியும் ஒரு வேளை நீங்கள் அந்தப் பாழும் கடைப் பக்கம் போய்விட்டீங்களோ என்றுதான்!" என்றாள்.

"ஓ! இனிமேல் அந்தப் பக்கம் போவேனா! அப்படியே போவதா யிருந்தாலும் நம்ம ஜில்லாவிலேதான் அடுத்த வாரத்திலே யிருந்து கள்ளுக் கடைகளையெல்லாம் மூடிவிடுறாங்களே! அதனாலே இனிமே அதைப் பத்தி நீ கொஞ்சம்கூடப் பயப்பட வேண்டாம்!" என்றான் துரைசாமி உணர்ச்சி ததும்ப.

"எல்லாம் அந்த மகாத்மா காந்தி புண்ணியம்; அவரு நல்லா யிருக்கணும்!" என்றாள் அங்கயற்கண்ணி.

● ● ● ● ● "மது உள்ளே சென்றால் அறிவு வெளியே வந்துவிடும்." ● ● ● ● ●

—ஒரு சீனப் பழமொழி.

# கம்பர் தரும் காட்சி



டி.கே.சி

## 188. காலிலே விழுந்தான் !

ராம லக்ஷ்மணரது உருவத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே அவர்கள் உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் உயர்ந்த குணம் படைத்தவர்கள் என்றும் தெரிந்து கொண்டான் அநுமன். ஆனால் இன்னார் என்று தெரியவில்லைதான். அதன் பேரில் கேட்கிறான்.

'யார்என விளம்புகேன் நான்
எங்குலத் தலைவற்கும் மை
வீரநீர் பணித்திர்' என் றான்
மெய்ம்மையின் வேலிபோல்
வான் ;—

வார்கழல் இளையவீ ரன்
மரபுளி வாய்மையா னும்
சோர்விலன் நிலைமையெல் லாம்
தெரிவுறச் சொல்லலுற் றான்.

[வீரநீர் பணித்திர் என்றான்: வீரர்களே சொல்லி அருள வேண்டும்: மெய்ம்மையின் வேலிபோல்வான்: உலகத்தில் லக்ஷியங்கள் அடிக்கடி மறைந்து போகப் பார்க்கின்றன. அவைகளைக் கட்டிக் காட்டி உறுதிப் படுத்துவதற்காக இடை இடையே மகான்கள் பிறக்கிறார்கள். சத்தியத்தை உறுதிப் படுத்துவதற்காக அவ்வகையில் பிறந்தவன் அநுமன்; வார்கழல் இளைய வீரன்: பெரிய வீரக் கழலை அணிந்த லக்ஷ்மணன்; மரபுளி வாய்மையானும்: வரிசைக் கிரமமாக நடந்த காரியத்தை யெல்லாம் ஒன்று விடாமல்; சோர்விலன்: சோர்வில்லாதவனான லக்ஷ்மணன். மறந்து எதையும் விட்டு விடாதபடி.]

லக்ஷ்மணன் அநுமனைச் சிறிது தூரம் எட்டி அழைத்துப் போய்ப் பேச ஆரம்பிக்கிறான்:

சூரிய குலத்திற் பிறந்தவன், சக்கரவர்த்தியாக விளங்குபவன், உயர்ந்த பண்புடையவன், தேவர்களுக்காக அசுரர்களை வதம் செய்தவன் என்றெல்லாம் தந்தையைப் பற்றிப் புகழ்கிறான்.

சூரியன் மரபில்த்தோன் றி
சுடர்நெடு நேமியாண் ட

ஆரியன், அமரர்க்கா கி
அசுரரை ஆவியுண் ட

வீரியன், வேள்விசெய் து
விண்ணுல் கோடும்ஆண் ட

காரியன், கருணைஅன் ன
கண்ணகன் கவிகைமன் னன்.

[சூரியன் மரபில்த் தோன்றி: சூரிய வம்சத்தில் வந்து; சுடர் நெடு நேமி ஆண்ட: ஒளி பொருந்திய பெரிய சக்ராயுதத்தைக் கையாண்ட; ஆரியன்: உயர்ந்த பண்புடையவன்; வேள்வி செய்து விண்ணுலகோடும் ஆண்ட காரியன்: தாராளமாக் விருந்தும் அன்னதானமும் செய்து அது காரணமாக மிக்க புகழ் படைத்தவன்; விண்ணுலகத் தவரை அவனது ஆதிக்கத்துக்கு உட்பட்டவர்கள் என்று சொல்லும்படி புகழ் படைத்தவன்; காரியன்: எந்தக் காரியத்தையும் சாதிக்கக் கூடியவன்; கருணை அன்ன கண்ணகன் கவிகை மன்னன்: குடிகளை ஒப்பற்ற கருணையோடு காத்து வந்தான். அந்தக் கருணையின் சின்னமாக இருந்தது மன்னனது வெண்கொற்றக் குடை; கண் அகல்: விசாலமான பூமி முழுவதையுமே கவித்து நின்றது குடை என்பது விஷயம்.]

* * *

தந்தையாகிய சக்கரவர்த்தியைப் பற்றி மாத்திரம் சொன்னால் போதாது என்று மூதாதையரைப் பற்றியும் பேசுகிறான் லக்ஷ்மணன்.

சூரிய குலத்துக்கு ஆதி மூர்த்தியான மனுச் சக்கரவர்த்தி சாமானியப் பட்டவன் அல்ல, மகாவீரன். அவனே

யானைமீதிருந்து யுத்தஞ் செய்து அசுரர்களை வென்றான். இத்தகைய வீரத்தோடு கல்வியிலும் இணையற்றவன். அவனுடைய தர்மத்தைத் ஒட்டியே அரசு செலுத்திய மன்னர்கள் எத்தனையோ பேர் எங்கள் மூதாதைகள்.

புயல்தரும் மதத்தின்கோட் டுப்
  புகர்மலைக்(கு) இறையையூர்ந் து
மயல்தரும் அவுணர்யா ரும்
  மடிதர வரிவிற்கொண் ட
இயல்தரும் புலமைச்செங் கோல்
  மனுமுதல் யாரும்ஒவ் வாத்
தயரதன் கனகமா டத்
  தடமதில் அயோத்திவந் தான்.

[புயல் தரும் மதத்தின் கோட்டு: மேகத்தைப் போல மதநீரைக் கொட்டுவதாயும் நீண்ட பெரும் தந்தங்களை யுடையதாயுமுள்ள; புகர்மலைக்கு இறையை ஊர்ந்து: வெள்ளைப் புகர்ப்படலம் பெய்த மலையோ என்று சொல்லும்படியான பட்டத்து யானை மீது தானே இருந்து கொண்டு; மயல்தரும் அவுணர் யாரும் மடிதர: அறிவு கெட்ட அரக்கர்கள் யாவரும் இறந்தொழிய; வரி விற் கொண்ட: வலிய வில்லேந்திப் போர் செய்த வீரன்; இயல் தரும் புலமைச் செங்கோல்: மரபுக்கு ஒத்த நீதி முறையை அறிந்து செங்கோல் செலுத்திய; மனுமுதல் யாருமே: மனுச் சக்கரவர்த்தியும் அவன் பின்னோர்களான சக்கரவர்த்திகள் யாருமே; ஒவ்வாத் தயரதன்: வீரத்திலும் புகழிலும் ஒப்பாகாத தசரதன் என்பவன்; கனக மாடத் தடமதில் அயோத்தி வந்தான்: பொன் மயமான மாளிகைகளின் வலிய மதில் சூழ்ந்த அயோத்திமா நகரத்தில் அவதரித்தான்.]

தசரதனைப் பற்றி வாயார மனமார எடுத்துச் சொல்லி விட்டான் லக்ஷ்மணன். ராமனைப் பற்றிச் சொல்ல வருகிறான் இனி.

அன்னவன் மைந்தனும் இவ்
  ஆண்தகை, அன்னைஏ வத்
தன்னுடை உரிமைச்செல் வம்
  தம்பிக்குத் தகவின்நல் கி,
நன்நெடுங் கானஞ்சேர்ந் தான்
  நாமமும் இராமன்என் பான்
இந்நெடுஞ் சிலைவலா னுக்(கு)
  ஏவல்செய் அடியன்யா னே.

[இவ் ஆண் தகை: இதோ இருக்கிற வீரன்; அன்னை ஏவ: சிற்றன்னையின் ஏவுதல்கள் காரணமாக; தகவின் நல்கி: மிக்க ஆர்வத்தோடு கொடுத்து; நல்நெடுங் கானம் சேர்ந்தான்: நாட்டுக்கும் நகரத்துக்கும் உரிய, பெருமை முதலிய நற்குணங்கள் நீங்கியுள்ள காட்டில் வசிக்கலானான்; தன்னை ஏவலாளன் என்று சொல்லிக் கொள்ளுகிறான். இப்படிச் சொன்னால் ராமனது தம்பி, தான் என்பதை யாரும் அறிந்துகொள்ளுவார்கள்.]

இந்த விதமாக ராமனது பரம்பரையைச் சொல்லிவிட்டு அரக்கன் மாயமாகச் செய்த காரியங்களை யெல்லாம் ஒன்று விடாமல் சொல்லி முடித்தான். இதை யெல்லாம் கேட்டு நின்ற அநுமனது மனநிலையை என்னவென்று சொல்லுவது!

என்றவன் தோற்றம்ஆ தி
  அரக்கன்அங்(கு) இழைத்தமா யப்
புன்தொழில் இறுதியா கப்
  புகுந்துள பொருள்கள்எல் லாம்
ஒன்றும்ஆன்(று) ஒழிவுறா மல்
  உணர்த்தினன்: உணர்த்தக்கேட் டு
நின்றஅக் காலின்மைந் தன்
  நெடியவன் அடியில்தாழ்ந் தான்.

[என்று அவன் தோற்றம் ஆதி: மேலே சொன்னபடி ராமனது பிறப்பு முதலான; புகுந்துள பொருள்கள் எல்லாம்: சம்பவித்துள்ள விஷயத்தை யெல்லாம்; ஒன்றும் ஆன்று ஒழிவுறாமல் உணர்த்தினன்: ஒன்றையும் விடாமல் எடுத்துச் சொன்னான்; காலின் மைந்தன் நெடியவன் அடியில் தாழ்ந்தான்: அநுமன் ராமன் நின்ற இடத்துக்குப் போய் அவன் காலில் அப்படியே விழுந்தான்.]

"இத்தகைய தியாக மூர்த்திக்கா இந்தத் துன்பம் நேரவேண்டும்!" என்று எண்ணிய மாத்திரத்தில் அநுமனுக்கு நிலை கொள்ளவில்லை. ஓடிப்போய் ராமன் காலில் விழுகிறான். வேறு என்ன செய்யக்கூடும்?

★ ★ ★ ★ ★ "ராணுவப் பேய் கொல்லுவதைவிட
மதுப் பேய்தான் அதிகமாகக்
கொல்லுகிறது." — ஒரு ஜெர்மன் பழமொழி. ★ ★ ★ ★ ★



# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த்] [மொழிபெயர்ப்பு: ரா. விழிநாதன்

## இருபத்திமூன்றாம் அத்தியாயம்

### கங்கணமும் கண்ணீரும்

ஒரு வாரத்துக்கு மேல் ஆகியும் ரமா நாத்தைப் பற்றிய விவரம் யாருக்குமே தெரியவில்லை. ஒவ்வொருவரும் தன் மனதுக் கிசைந்தவாறு அவனைப் பற்றிக் கதை கட்டிவிட்டுக் கொண்டிருந்தனர். ரமேஷ்பாபு மட்டும் தினம் இரண்டொரு தடவை அவனுடைய வீட்டுக்குப் போய் அவனைப்பற்றி விசாரித்து வந்தார். 'உலகம் பலவிதம்' என்றபடி ஊரில் விதவிதமாகப் பேசிக் கொள்ளலாயினர். 'அவன் பதினொரு மணி சுமாருக்கு ரெயில்வே ஸ்டேஷன் பக்கமாகப் போனான்' என்பது மட்டும் ஊர்ஜிதமான செய்தியாக உலவியது. தயாநாத பாபுவுக்கு அவன் தற்கொலை புரிந்து கொண்டிருப்பானோ என்று சந்தேகம். ஆனால் அவர் அதை வெளிக்குச் சொல்லிக் கொள்ளவில்லை. இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் அப்படி எத்தனையோ சம்பவங்கள் நடந்து அவர் தன் கண்களாலேயே கண்டிருக்கிறார். இந்த நிலைமை ஏற்பட்டதற்குப் பத்மாதான் மூலகாரணம் என்பது மாமியார்—மாமனாருடைய ஏகோபித்த அபிப்பிராயம். [அவர்கள் 'உன்னால்தான் அவன் இப்படியெல்லாம் பாழாய்ப் போனான்!'' என்று சொல்லிக் குத்திக் காட்டவும் ஆரம்பித்து விட்டார்கள். 'ரமாநாத்துக்கு அப்படி என்ன பிரமாத வரும்படி வந்துவிட்டது? நீ தினம் பொழுது விடிந்தால் 'வண்டி வைத்துக் கொண்டு ஊர் சுற்றி அவனை ஆண்டியாக அடித்துவிட்டதனால் அல்லவா அவன் இப்படிச் சொல்லிக் கொள்ளாமல் ஓடும்படி யாகிவிட்டது!'' என்று அவளை அவர்கள் ஏசிக் காட்டவும் ஆரம்பித்து விட்டார்கள். அவள் பேரில் யாருக்குமே கடுகளவுகூட இரக்கம் ஏற்படவில்லை. அவளைத் தேற்றுவாரும் யாரும் இல்லை. ரமேஷ் பாபு மட்டும் அவளுடைய சமயோசித புத்தியையும் கெட்டிக்காரத்தனத்தையும் மெச்சினார். ஆனால் தயாநாத பாபுவுக்கு அவள் செய்த அந்தக் காரியம் அவ்வளவு பெரிதாகத் தோன்றவில்லை. 'நெருப்புக்கு நெருப்பையும் வைத்துவிட்டு அணைப்பதற்காகத் தண்ணீர் கொண்டு வர ஓடினால் குற்றம் மறைந்து விடுமா?' என்பது அவருடைய கட்சி.

ஒரு நாள் தயாநாத பாபு வாசக சாலைக்குப் போய்விட்டுத் திரும்பும்பொழுது முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு வீடு வந்து சேர்ந்தார். அவருடைய முகம் எப்பொழுதுமே அப்ரஸன்னம்தான்! அப்படியிருக்கும்பொழுது முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு வந்துவிட்டால் கேட்பானேன்? குழந்தைகள்கூட 'அவருக்குக் கோபம்' என்பதைப் 'பளிச்'சென்று சொல்லிவிடும்!

ஜாகேச்வரி அவரைப் பார்த்ததும், ''இன்றைக்கு யாருடனாவது சண்டை - இண்டை போட்டுக் கொண்டு வந்திருக்கிறீர்களா, என்ன?'' என்று கேட்டாள்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. வாசலில் தலைகாட்ட வழியிருந்தால்தானே! எங்கே போனாலும் கடன்காரர்கள் கச்சரிக்கத் தொடங்கி விடுகிறார்கள். எத்தனை பேரிடம் தான் அவன் கடன் வாங்கியிருக்கிறானோ, தெரியவில்லை. கண்டவன்கள் எல்லாம், 'எனக்குப் பணம் வரவேணும், எனக்குப் பணம் வரவேணும்' என்று கழுகு மாதிரிக் கொத்தி எடுக்கிறான்கள். இன்றைக்குத் தான் நான் எல்லாரிடமும் 'எனக்கு ஒன்றும் தெரியாது. அவன் வாங்கின கடனை நான் தீர்க்க வேண்டியது அனாவசியம். வேண்டுமென்றால் சின்ன எசமானியம்மாளையே போய்க் கேட்டுக் கொள்ளுங்கள் என்று திட்டமாகச் சொல்லி விட்டேன்" என்றார் தயாநாதபாபு.

இதைக் கேட்டுக்கொண்டே பத்மா அங்கே வந்தாள். இந்த ஏழு நாட்களுக்குள் அவள் அடையாளம் தெரிந்து கொள்ள முடியாதபடி ஒரே யடியாக மாறிப் போயிருந்தாள். அழுது அழுது அவளுடைய கண்கள் வீங்கிப் போயிருந்தன. மாமனாரின் வாயிலிருந்து இந்த மாதிரியான 'கடும் சொற்களைக் கேட்டு, அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாகவந்தது.

"சரி, அப்படியே அவர்களையெல்லாம் என்னிடம் அனுப்பி வையுங்கள். நல்ல வார்த்தை சொல்லி அவர்களைச் சமாதானப்படுத்திப் பார்க்கிறேன். முடியாவிட்டால், எப்படியாவது நான் அவர்களுடைய கடனைத் தீர்த்து விடுகிறேன்!" என்று அவள் அவருக்கு வெடிப்பாகப் பதில் அளித்தாள்.

தயாநாதபாபுவும் குரலில் தீவிரம் தொனிக்க, "ஒரு ரூபாயா, இரண்டு ரூபாயா, உன்னால் அந்தக் கடனைத் தீர்க்க முடிவதற்கு? ஆயிரக் கணக்கில் அல்லவா கடன் சுமை ஏறியிருக்கிறது! ஒரு கடைக்காரனுக்கு ஏழுநூறுக்கு மேல் கொடுக்க வேண்டுமாம். இதுவரை நீ எவ்வளவு ரூபாய் கொடுத்துக் கிழித்திருக்கிறாய்?" என்று கேட்டார்.

"அவர்கள் கொடுத்த நகைகள் அப்படியேதான் இருக்கின்றன. இரண்டு மூன்று தடவைகள்தான் இதுவரை நான் போட்டுக் கொண்டிருப்பேன். அவர்கள் வந்தால் என்னிடம் அனுப்பி வையுங்கள். நான் அவர்களிடம் நகைகளைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்.



அவர்கள் 'பிரு' பண்ணினால் இவ்வளவு நாள் என்னிடம் இருந்ததற்காக, நான் ஐந்து ரூபாய் வாடகை கொடுத்து விட்டால் போயிற்று!'' என்று சொல்லி விட்டுப் பத்மா வெகு வேகமாக மாடி யேறிப் போய்விட்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ரத்தன் அவளைப் பார்ப்பதற்காக வந்தான். அவன் அன்பு ததும்பும் குரலில், "அவரைப் பற்றி ஏதாவது சமாசாரம் தெரிந்ததோ?'' என்று அனுதாபத்துடன் கேட்டான்.

பத்மாவுக்கு ரத்தனுடைய வார்த்தைகளில் அன்பும் அனுதாபமும் வழிந்தோடுவதை நினைக்கும்பொழுது, 'நமக்கு ஒரு விதமான சொந்தமும் இல்லாத இவன், நமக்காக இவ்வளவு கவலைப்படுகிறானே! நமக்கு மிகவும் வேண்டியவர்கள் என்று நினைக்கும் இந்த மாமனார், மாமியார் மனதில் சிறிதும் ஈவு இரக்க மின்றி நம்மை இப்படி ஆட்டி வைத்து விடுகிறார்களே! சொந்தக்காரர்களை விட இவன் எத்தனையோ மேல் போலிருக்கிறதே!' என்று தோன்றிற்று. அவள் கண்களில் நீர் ததும்ப, "இன்னும் ஒன்றும் தெரியக் காணோம், அம்மா!'' என்றாள்.

"ஆமாம், உனக்கும் அவருக்கும் ஏதாவது மனஸ்தாபம் ஏற்பட்டுவிட்டதோ?''

"இல்லவே யில்லை. அவர் பணம் கெட்டுப் போனதைப் பற்றி என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. அவர் ஜாடை மாடையாகச் சொல்லி யிருந்தால் கூட நான் பணத்தைக் கொடுத்திருப்பேன். அவர் மத்தியானம் வரையில் வீட்டுக்கு வாராமல் போகவே, 'என்னவோ, ஏதோ!' என்று எண்ணித் தேடிக்கொண்டு அவருடைய ஆபீஸுக்குப் போனேன். அங்கே போன பிறகு அவர் ஆபீஸ் பணத்தைக் கெட்டுப் போக்கிவிட்டார் என்ற சமாசாரம் தெரிந்தது. உடனே வீட்டுக்கு ஓடிவந்து அந்தப் பணத்தை எடுத்துப் போய்க் கட்டி விட்டு வந்தேன்!''

"அப்படியா? 'அவர் யாராவது ஒரு மாய்மாலக்காரியின் வலையில் சிக்கி யிருப்பாரோ?' என்று நான் நினைக்கிறேன். அப்படி இல்லாவிட்டால் இத்தனை நாள் திரும்பி வந்திருக்க மாட்டாரா? நான் சொல்லுவதுதான் சரியா யிருக்கும். இன்னும் பத்துப் பதினைந்து நாட்களுக்குள் 'குட்டு' வெளிப்பட்டு விடும், பார்!'' என்று சொன்னான் ரத்தன்.

பத்மா இதைக் கேட்டதும் அப்படியே ஸ்தம்பித்துப் போய், "அப்படி ஏதாவது நீ கேள்விப்பட்டாயா, என்ன?'' என்றாள்.

"இல்லை, அப்படி யெல்லாம் கேள்விப் படவில்லை. 'அப்படி யிருக்குமோ!' என்று நானாகத்தான் ஊகிக்கிறேன்.''

"இல்லை, ரத்தன்! அவர் அப்படி யெல்லாம் மோசமாகப் போகிறவர் இல்லை. அவரிடம் எத்தனையோ கெட்ட குணங்கள் இருக்கலாம். ஆனால் அந்தமாதிரிக் கெடுதல் இல்லை என்பது மட்டும் நிச்சயம். அந்த மாதிரிச் சந்தேகங்கள் எழும்படியாக அவர் நடந்து கொண்டதே யில்லை'' என்றாள் பத்மா.

ரத்தன் சிரித்துக் கொண்டே, "உனக்கென்ன தெரியும்? ஆண் பிள்ளைகள் இந்தக் கலையில் மிகவும் கைதேர்ந்தவர்கள். அப்படி யெல்லாம் சுலபமாகக் கண்டு பிடிக்க விட்டுவிடுவார்களா?'' என்றான்.

பத்மா திடமான குரலில், "அவர்கள் வேண்டுமானால் அந்தக் கலையில் நிபுணர்களா யிருக்கலாம். நாம் அவர்களுடைய உள்ளத்தைப் பரீக்ஷிப்பதில் எந்த விதத்திலும் அவர்களை விடக் குறைந்தவர்கள் இல்லை. நீ என்ன சொன்னாலும் நான் ஒத்துக் கொள்ள முடியாது. அவர் தடுக்கில் புகுந்தால், நான் கோலத்தில் புகுவேனாக்கும்!'' என்றாள்.

"சரி, அதிருக்கட்டும். இப்படிக் கொஞ்ச தூரம் எங்கேயாவது போய்விட்டு வருவோம், வருகிறாயா?''

"இல்லை, எனக்கு இப்பொழுது வெளியே வருவதற்குப் பொழுதில்லை. இப்பொழுதே வீட்டில் உள்ளவர்கள் என்னைப் போட்டுக் கன்னி காய்ச்சுகிறார்கள். அப்புறம் பிராணனையே வாங்கி விடுவார்கள். ஆமாம், எங்கே போவதாக உத்தேசம்?''

"எங்கேயும் இல்லை. கொஞ்சம் கடைத் தெரு வரை போய்விட்டு வரலாமே என்று எண்ணினேன்.''

"ஏதாவது வாங்கப் போகிறாயா, என்ன?''

"ஆமாம், உன் கங்கணத்தைப் போல ஒரு கங்கணம் வாங்க வேண்டுமென்று எண்ணம். உன் அகத்துக்காரர்தான் நாலைந்து மாதங்கள் அலைக்கழித்து விட்டுப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டாரே, 'நாமேதான் போய்த் தேடி

வாங்குவோமே' என்று எண்ணிப் புறப்பட்டேன்."

"என் கங்கணம் என்ன, அவ்வளவு உயர்த்தி? கடைத்தெருவில் இதைவிட இன்னும் நல்ல நல்ல கங்கணங்கள் கிடைக்குமே!"

"எனக்கு உன்னுடையது மாதிரித்தான் வாங்க வேண்டும் என்று ஆசை."

"அந்த மாதிரித்தான் வேண்டுமென்றால் 'ரெடிமேடா'கக் கிடைப்பது சற்றுச் சிரமம். 'ஆர்டர்' கொடுத்தால்தான் செய்து தருவான். அதில் உள்ள தொல்லைகள்தான் உனக்குத் தெரியாததல்லவே! உனக்கு அவசியம் இதுமாதிரித்தான் வேண்டுமென்றால் என்னுடையதை வேண்டுமானால் எடுத்துக் கொண்டு விடு. அப்புறம் நான் மெதுவாகச் செய்து போட்டுக் கொள்ளுகிறேன்" என்றாள் பத்மா.

ரத்தன் அதைக் கேட்டதும் மகிழ்ச்சி வெறியில், "நீ உன்னுடையதையே தருகிறேன் என்றால் அப்புறம் கேட்பானேன்? கரும்பு தின்னக் கூலி வேறா? நீ உன்னுடையதைத் தருவதாயிருந்தால் எனக்கு இரட்டிப்புச் சந்தோஷம். அதன் விலை அறுநூறு ரூபாய்தானே?" என்று கேட்டாள்.

"ஆமாம்; அறுநூறு ரூபாய்க்குத்தான் செய்தது. ஆனால் தட்டான் எத்தனை நாட்களுக்கு அலைக்கழித் திருப்பான், தெரியுமா? கல் வைத்து இழைக்கிற பொழுது நானே கிட்ட உட்கார்ந்திருந்தேனாக்கும்! உனக்கென்றால் கொடுப்பதற்கு எனக்கு ஒன்றும் ஆட்சேபம் இல்லை" என்று சொல்லிய வண்ணம் பத்மா தன் கையிலிருந்த கங்கணத்தைக் கழற்றி ரத்தனின் கையில் போட்டுவிட்டாள். ரத்தனுடைய முகம் உல்லாசத்தினால் மலர்ந்தது. அவள் மிகவும் நன்றி ததும்பிய குரலில், "நீ எத்தனை கேட்டாலும் நான் தரத் தயார்! உனக்குக் குறைத்துக் கொடுக்கும் நோக்கமே எனக்கு என்னவும் இல்லை. நீ மனம் வைத்து எனக்குத் தர முன் வந்தாயே, அதுவே பெரிது. ஆனால் ஒரே ஒரு விஷயம். இப்பொழுதே பூராப் பணமும் வேண்டுமென்று கேட்டால் என்னால் தர முடியாது. பாக்கி இருநூறு ரூபாய் அப்புறம் கொடுத்தால், உனக்கு ஆட்சேபனையொன்றும் இல்லையே?" என்று கேட்டாள்.

பத்மா வெகு துணிச்சலுடன், "எனக்கு ஒரு விதமான ஆட்சேபனையும் இல்லை. மெதுவாகக் கொடு. அப்படி நீ தராமலே இருந்து விட்டாலும்கூட எனக்கு வருத்தமில்லை" என்றாள்.

"அதற்காகச் சொல்லவில்லை. இப்பொழுது என் கையில் நானூறு ரூபாய்தான் இருக்கிறது. அதை இப்பொழுதே தந்து விடுகிறேன். என்னிடம் இருந்தால் செலவழிந்து விடும். என் கையில் ஏனோ தெரியவில்லை, ரூபாய்களே தங்குவதில்லை. காசு கையை விட்டுக் கரையாத வரையில், எனக்கு ஒரே பெருஞ் சுமையாக இருக்கிறது. அது கையை விட்டுப் போனால்தான் திருப்தி ஏற்படுகிறது" என்றாள் ரத்தன்.

பத்மா கங்கணம் வைக்கும் பெட்டியை எடுத்து ரத்தனிடம் கொடுக்க நீட்டிய பொழுது, அவளுடைய மனதை ஏதோ ஒரு சுமை அழுத்தியது. ரமாகாந்த் பத்மாவின் கைகளில் அந்தக் கங்கணத்தைப் போட்டுப் பார்த்து எவ்வளவு புளகாங்கிதமுற்றான்? இன்று அவன் மட்டும் வீட்டில் இருந்தால் இந்தக் கங்கணம் அவளுடைய கையை விட்டுப் போயிருக்குமா? இனிமேல் இந்தமாதிரிக் கங்கணம் போட்டுக் கொள்ளும் பாக்கியம் பத்மாவுக்குக் கிட்டுமோ கிட்டாதோ, யார் கண்டது? அவள் தன் மனத் துயரத்தை வெளிக் காட்டாமல் அடக்கிக் கொள்ள முயன்றாள். ஆனால் அந்தப் பாழும் கண்ணீர் வெளிவந்து அவளுடைய பலவீனத்தையும் துயரத்தையும் வெளிக்காட்டியே விட்டது.

ரத்தன் அவளுடைய கண்களில் கண்ணீர் மல்கி இருப்பதைக் கண்ணுற்று,

## பெரிய பகைவன்

"நாம் மூன்று எதிரிகளுடன் யுத்தம் செய்கிறோம். முதல் எதிரி ஜெர்மனி, இரண்டாவது எதிரி ஆஸ்டிரியா, மூன்றாவது எதிரி மதுபானம். மூன்றிலும் மதுபானமே பெரிய பகைவன்."

—லாயிட் ஜார்ஜ்.

"இருக்கட்டும், பத்மா! அவசரம் எதற்கு? அப்புறம் எடுத்துக் கொள்ளுகிறேனே?" என்றாள்.

பத்மா அவளிடம் கைப் பெட்டியை நீட்டியவாறே, "ஏன்? என் கண்ணீரைப் பார்த்துவிட்டா அப்படிச் சொல்லுகிறாய்? நீ கேட்கிறாயே என்று தருகிறேனே தவிர, வேறு யாராவது கேட்டால் உயிர் போனாலும் இதைக் கொடுப்பேனா? இது எனக்கு உயிரினும் உயிரா யிருந்ததல்லவா? உன்னிடம் இருந்தால் என் மனதுக்குக் கொஞ்சம் ஆறுதலாகவாவது இருக்கும். உன்னை ஒன்று வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன். இதை வேறு யாருக்கும் கொடுத்து விடாதே!" என்றாள்.

"இன்னொருத்தரிடம் நான் இதை எதற்காகக் கொடுக்கப் போகிறேன்? இதை உன் ஞாபகார்த்தமாகத்தான் வைத்துக் கொள்ளப் போகிறேன். இன்று வெகு நாட்களுக் கப்புறம் என் ஆசை பூர்த்தியுற்றது. ஆனால் ரமாநாத் பாபு இல்லாத குறைதான் மனதுக்கு மிகவும் சிரமத்தைக் கொடுக்கிறது. 'அவர் சீக்கிரமே வந்து விடுவார்' என்று என் மனத்துள் ஏதோ ஒன்று சொல்லுகிறது. அவர் வெட்கப்பட்டுக்கொண்டு ஓடி யிருக்கிறார்; வேறொன்றுமில்லை. என் அகத்துக்காரர் கூட இதைக் கேட்டுவிட்டு ரொம்பவும் வருத்தப்பட்டார். 'வக்கீல்கள் எல்லாருமே கல் நெஞ்சர்கள்' என்று இந்த ஜனங்கள் சொல்லுகிறார்களே, 'அது அவ்வளவும் பொய்யோ' என்று என் அகத்துக்காரரைப் பார்க்கும்பொழுது தோன்றுகிறது. ஏனென்றால், யாராவது கஷ்டப் படுகிறார்கள் என்று கேள்விப்பட்டு விட்டால் அவர் அப்படியே உருகிவிடுகிறார்!" என்றாள் ரத்தன்.

பத்மா புன்முறுவலுடன், "உன்னை ஒன்று கேட்க வேண்டும் என்று வெகு நாளாகவே எனக்கு ஆசை! நீ அதைத் தப்பாக எடுத்துக்கொள்ள மாட்டாயே! வக்கீல் மனமும் உன் மனமும் ஒத்துப் போகிறதா? உண்மையை ஒளிக்காமல் சொல்லு!" என்று கேட்டாள்.

ரத்தனின் மலர்ச்சி தாண்டவமாடும் முகம் ஒரு கணத்துக்குத் தொட்டாற் சுருங்கி போல வாடிவிட்டது. அவள், "என் உள்ளத்தில், 'நான் யுவதி, அவர் கிழவர்' என்ற எண்ணமே இதுவரை எழுந்ததில்லை. என் உள்ளத்தில் உள்ள அத்தனை அன்பையும் ஆசையையும் நான் அவருக்கேதான் சமர்ப்பித்து விட்டேன். ஆசை யௌவனத்தினாலோ, அழகினாலோ, பணத்தினாலோ, உண்டாகும் வஸ்து அல்ல; ஆசை யென்பது ஆசையின் காரணமாகத் தான் உண்டாகிறது. எனக்காகத்தானே அவர் இந்தத் தள்ளாத வயது காலத்தில் இப்படி யெல்லாம் உழைக்கிறார். அவருக்கு என்னை விட்டால் வேறு யார் இருக்கிறார்கள்? நீயே யோசித்துப் பார். எனக்காக அவர் இவ்வளவு செய்வதை சிறிய விஷயம் என்று ஒதுக்கித் தள்ளிவிட முடியுமா? அதிருக்கட்டும், நாளைக்குச் சாயந்திரம் நீ எங்கேயாவது வெளியே வருகிறாயா? வருவதா யிருந்தால் சாயந்திரம் உன்னை அழைத்துப் போக வருகிறேன்" என்றாள்.

"நான் எங்கே வெளியே வரப் போகிறேன்? அதற்காக நீ வராமல் இருந்து விடாதே! நீ வந்தால் என் மனதுக்குக் கொஞ்சமாவது ஆறுதல் ஏற்படும். எனக்கு என்னவோ ஒன்றுமே பிடிக்கவில்லை. மனது என்னவெல்லாமோ யோசனை செய்கிறது. 'அவர் என்னிடம் இவ்வளவு சங்கோசப்படுவதற்குக் காரணம் என்ன?' என்பதுதான் எனக்கு விளங்கவேயில்லை. என்

## குடியை வளர்த்தார்கள்!

இந்தியாவில் கள்ளையும் சாராயத்தையும் வளர்ப்பதற்காகப் பிரிட்டிஷ் சர்க்கார் எடுத்துக் கொண்ட சிரத்தையை விளக்குவதற்குக் கீழ்க்கண்ட இந்திய சர்க்கார் கலால் வருமானப் புள்ளி விவரம் ஒன்றே போதும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1900-ல் | சர்க்கார் | வருமானம் | 6-கோடி | ரூபாய் |
| 1910-ல் | .. | .. | 10 | .. |
| 1912-ல் | .. | .. | 12 | .. |
| 1914-ல் | .. | .. | 14 | .. |
| 1918-ல் | .. | .. | 17 | .. |
| 1920-ல் | .. | .. | 20 | .. |
| 1928-ல் | .. | .. | 23½ | .. |

இதற்குப் பிறகும் கலால் வருமானம் இதே மாதிரி ஒன்றுக்குப் பல மடங்கு அதிகமாகப் பெருகிக் கொண்டே வந்திருக்கிறது.

னிடம் ஏதோ குற்றம் குறைகள் இருக்கக் கொண்டுதானே அவர் என்னிடம் எத்தனையோ விஷயங்களை ஒளித்து மறைத்து வைத்திருக்க வேண்டும்? நான் அவருடைய உண்மை அன்பைப் பெற முடியவில்லையே!' என்றுதான் எனக்கு ரொம்பவும் வருத்தமாயிருக்கிறது. உண்மையாகப் பழகுகிறவர்களிடத்தில் யாராவது ஒளித்து மறைத்து வைப்பார்களா?'' என்றாள் பத்மா.

"எதற்காக மனதை அலட்டிக் கொள்ளுகிறாய்? அவர் பணம் கெட்டுப் போன விஷயத்தைச் சொல்லச் சங்கோசப்பட்டுக் கொண்டுதான் எங்கேயோ தலைமறைவாக இருக்கிறார். தான் செய்த அசட்டுக் காரியத்தை எண்ணி யாருமே இப்படியிருப்பது சகஜம்தான்; கவலைப்படாதே!'' என்று சொல்லிவிட்டு ரத்தன் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான். கங்கணப் பெட்டி மேஜையின் மீதே வைத்திருப்பதைக்கண்ட பத்மா, "ரத்தன், இதை எடுத்துக் கொண்டு போயேன்! எதற்காக இங்கே வைத்துவிட்டுப் போகிறாய்?'' என்றாள்.

"மெதுவாக எடுத்துக் கொள்ளுகிறேன். அதற்கென்ன, இப்பொழுதே அவசரம்? நான்தான் உனக்கு இன்னும் பாக்கிப் பணம் கொடுக்கவில்லையே!''

"பரவாயில்லை; நீ மெதுவாகக் கொடு! ஆனால் கங்கணத்தைக் கையோடு எடுத்துக் கொண்டு போ!'' என்றாள் பத்மா.

ஆனால் ரத்தன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் கீழே இறங்கி விட்டான். பத்மா கையில் கங்கணத்தை எடுத்துக் கொண்டு நின்ற வண்ணம் இருந்தாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பத்மா பெட்டியி லிருந்து ஐந்நூறு ரூபாயை எடுத்துக்கொண்டு கீழே இறங்கி வந்தாள். நேரே தயாநாத பாபுவிடம் சென்று, "இந்தாருங்கள், இந்த ரூபாயை நாராயணன் கடைக்கு அனுப்பிவிடுங்கள். பாக்கியையும் கூடிய சீக்கிரமே தந்து விடுகிறேன்'' என்றாள்.

தயாநாத பாபு அசடு வழிந்த குரலில், "இந்த ரூபாய் ஏது?'' என்று கேட்டார்.

பத்மா சங்கோசத்தை விட்டு, "என் கங்கணத்தை ரத்தனுக்கு விற்றுவிட்டேன்'' என்றாள்.

தயாநாத பாபு 'கல்லாய்ச் சமைந்து நின்று, அவளுடைய முகத்தையே உற்று நோக்கலானார். (தொடரும்)

# காலக்ஷேபம்

பெரியவர்:—ஐயா, போலீஸ்காரரே! அங்கே பாருங்க, அவுங்க ரெண்டு பேரும் குடிச்சிட்டு என்னமா சண்டை போடறாங்க? சித்த விலக்கி விடுங்களேன்!

போலீஸ்காரர்:— நீங்க பாட்டுக்குப் போங்கோ! உங்களுக்கு ஏன் அந்த வம்பு?

பெரியவர்:—வம்புதான் அப்பா, வம்புதான்! அதில் ஒருவன் என் கைத்தடியைப் பிடுங்கிக் கொண்டு அல்லவா சண்டை போடுகிறான்?

★

கருமான் (குடிவெறியில்):— என்ன அண்ணே, கள்ளுக்கடைகளை மூடப் போறாங்களாமே! நீ என்ன செய்யப்போறே?

தச்சன்:—என்னத்தைச் செய்யறது? ஊரிலேயிருக்கிற கள்ளுக் கடைகளை யெல்லாம் மூடணும்னு எத்தனை கதவுகள் வேண்டியிருக்கும்? அத்தனை கதவுகளையும் நானேதான் செய்யப் போறேன்!

கருமான்:—அப்படின்னு சரி, அண்ணே! நான் அந்தக் கதவுகளை யெல்லாம் சாத்திப் பூட்டறதுக்குப் பூட்டுகள் செய்யறேன்!

★

வெளியூர் லாரி டிரைவர்கள் இருவருக்கு நல்ல குடி. அவர்களில் ஒருவன் வண்டியை ஓட்டிக் கொண்டு வந்தான். இன்னொருவன் அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து என்ன வெல்லாமோ உளறிக் கொண்டு வந்தான்.

முதலவன்:—என்ன, அண்ணே! அதற்குள்ளே நாம் பட்டணம் வந்து சேர்ந்து விட்டோம் போலேயிருக்குதே!

இரண்டாமவன் (ஆச்சரியத்துடன்):— உனக்கு எப்படி அண்ணே, தெரிந்தது?

முதலவன்:—இல்லேன்னு இத்தனை பேரு நம்ம வண்டியிலே மாட்டிக்கிட்டு 'ஐயோ, குய்யோ!'ன்னு சாவாங்களா?

★

குப்பனும் சுப்பனும் கையில் கள்ளுக் கலயங்களுடன் கடையை விட்டு வெளியே வந்து, சாலையோரமாக அமர்ந்தனர். அப்போது குப்பனுக்குத் தெரிந்த வாத்தியார் ஒருவர் அந்த வழியே வந்துகொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் குப்பன் வெட்கிப் போய், "அடேய், சுப்பா! அதோ பார், வாத்தியார் வருகிறார்......'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

"வாத்தியாரா இருந்தால் என்னடா? வேணும்னு மரியாதைக்காக அவருக்கு முதல்லே உன் கையிலிருக்கிற கலயத்தைக் கொடுத்துட்டு, நீ போய் வேறே வாங்கிக் கிட்டு வாயேன்!'' என்றான் குப்பன்.

★

முதல் குடிகாரன் (வெறுங் கையை மூடிக் கொண்டு):—டேய், என் கையிலே என்னத்தை மூடி வைத்திருக்கிறேன், சொல்லு பார்க்கலாம்?

இரண்டாவது குடிகாரன்:—என்னடா, இது தெரியாதா? ஏரோப்பிளேன்!

முதல் குடிகாரன்:—போடா, நான் கையை மூடிக் கொள்ளும்போது நீ பார்த்துவிட்டாய்!

# நீடித்த உழைப்பு
அத்துடன்
# குறைந்த செலவு!

இதைப் பரிக்ஷியுங்கள்...இதனுல் எழுதிப் பாருங்கள்! எப்பேர்ப்பட்ட நிப்பு! வயிரத்தைப் போன்ற உறுதி — ஆயினும் வெல்வெட் போன்ற வழவழப்பு— ஏனெனில் இதன் நிப்பு 14 காரட் முழு தங்கம். அத்துடன் லேப்-டைம் ஆஸ்மி இரிடியம் நுனைவத்தது. மெண்ட்மோர் பேனுக்கள் ஸ்டட், லீவர் மற்றும் டிரஸப் முறையில் இங்க் போடும் விதங்களில் கிடைக்கும்.




விலை
ரூ.15/-

இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்டது

# MENTMORE
*Auto-Flow*

## மெண்ட்மோர்
## ஆடோ-ப்ளோ

வியாபார ஸம்பந்தங்களுக்கு மேற்கண்ட பூரண உரிமையாளர்களுக்கு எழுதவும்:
முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்
குவீன்ஸ் மான்ஷன்ஸ்
பாஸ்டியன் ரோடு, பம்பாய்

# கோகுல்

சந்தனத் தைலம்

அரைக்கீரை விதைத் தைலம்

கூந்தல் தைலம்






எங்கள் தயாரிப்புகள் ஒவ்வொன்றும் கோகுல் டிரேட் மார்க் இருப்பதை கவனியுங்கள்.

டி.எஸ்.ஆர் & கோ
கும்பகோணம்.

மதராஸ் ஏஜண்டு:
புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் & பாலக்காடுக்கு ஏஜண்டு:
B. பாலபட்டாபி,
வைசியாள் தெரு, கோயமுத்தூர்

SUNSHINE
Glaxo

ஸன்ஷைன் கிளாக்ஸோ
குழந்தைகளை புஷ்டியாக வளர்க்கிறது

இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
எச். ஜே. பாஸ்டர் & கோ., லிட்.
பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - லாகூர்

குழந்தைகளை பராமரிப்பைப் பற்றிய சிறிய புத்தகம் 4 அணுவுக்கு ஸ்டாம்புகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். உங்கள் பெயரையும் விலாசத்தையும் எச். ஜே. பாஸ்டர் & கோ. லிட்., த. பெ. 202, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

முன்னறிவிப்பு

ஸாரிடோன்
வலிகளை ஆற்ற மிகவும் கைகண்டது

# வந்தனம்!
# நீங்கள் லைப்பாய் தேகாப்பியாசம் செய்தீர்களா?



ஒரு தேசமக்களின் சிறப்பு அவர்களுடைய ஆரோக்கியத்தைப் பொறுத்தேயிருக்கிறது. திட ஆரோக்கியத்தைப் பெறுவதற்கான மார்க்கம் தவறாமல் தேகாப்பியாசம் செய்வதும், சரீரசுத்தத்தை கவனிப்பதும், சத்துள்ள சாதாரண உணவை உட்கொள்வதும் தான். உங்கள் தேகசுத்தத்திற்கு லைப்பாய் சோப் உபயோகியுங்கள். அதிலடங்கியுள்ள விசேஷ சுகாதாரப் பொருள் உங்கள் உடலை நோய்களிலிருந்து பாது காக்க உதவுகிறது.

லைப்பாய் தேகப் பயிற்சிப் படங்களுக்கு Dept. A411 P.O. Box 758, Bombay, 1 என்ற விலாசத்திற்கு இரண்டணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.






## லைப்பாய் சோப்புடன்
## துவக்கும் நாளே நன்னாள்



L. 92-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

குழந்தைக்கு முக்கியமானது **பேபி கிரைப்** குழந்தைக்கு ஆரோக்கியமளிப்பது

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும்போது ஏற்படும் வயிற்றுப் போக்கு முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்.

## அயோடிசால்

மிகச் சிறந்த ரத்த சுத்தி மருந்து

இது திரேகத்தில் உஷ்ணம் அதிகரித்து அதனால் ஏற்படும் ரோகங்களை குணப்படுத்தி, திரேகத்திற்கு ஆரோக்கியத்தை கொடுக்கும் ரத்தத்தை சுத்தி செய்து ரத்த விருத்தியையும் உண்டாக்கும்.

## சைபால்

முகப்பரு, சேத்துப் புண் சிரங்கு, வேனல் கட்டி, தீப்பட்ட புண் கரப்பான் முதலியவைகளுக்குக் கைகண்ட மருந்து.

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள் :

## தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி, மதுரை

ஏஜண்டுகள் :—ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்—பெஜவாடா, பேர்ஹாம்பூர் & சிகந்தராபாத்; கிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி

சிலோன் ஏஜண்டுகள் :—M. O. A. கனி & கோ., 96, சதாம்ஸ் ரோடு, கோட்டை, கொழும்பு

# தி இந்தியன் பாங்க் லிமிடெட்

தலைமை ஆபீஸ் : " இந்தியன் பாங்க் பில்டிங்ஸ் " வடக்குபீச் ரோடு, மதராஸ்

லோகல் ஆபீஸ்கள் : எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்ட் ரோடு மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.



| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 53,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 60,72,602 |



சகல விதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸையாவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர், செக்ரடரி

## ஜலதோஷம், தலைபாரம் மூக்கு அடைப்பு

**இந்த உபாதைகளுக்கு ஏன் உங்களைக் கஷ்டப்படுத்துகிறீர்கள்?**



ஜலதோஷம் உங்களுக்கு கஷ்டத்தையும் அவதியையும் கொடுத்து சிரமப்படுத்த விடாதீர்கள். இதோ அதி சுலபமாகவும் துரிதமாகவும் நிவர்த்தி செய்யும் சாதனம் இருக்கிறது. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் (படத்தில் காட்டியுள்ளபடி) ஒவ்வொரு நாசித்துவாரத்திலும் கார்ஸோட்ரைன் குழாயை வைத்து சுவாசத்தை உள்ளிழுக்க வேண்டியதுதான். இரு முறை சுவாசித்தால் போதுமானது. மூக்கினுள்ள மெல்லிய தோலின் வீக்கம் வாடி அடைப்பு நீங்கி, ஓய்வளித்து உங்களுக்கு சௌகரியமாக சுவாசிக்குமாறு செய்ய கார்ஸோட்ரைன் துரிதமாக உதவி செய்கிறது. கார்ஸோட்ரைன் குழாய் மிகவும் சிறியது. கையிலேயே எடுத்துச் செல்ல எளிதானது. பர்ஸிலோ பாக்கெட்டிலோ வைத்துக் கொள்ளலாம். ஒரு குழந்தைகூட நிர்ப்பயமின்று உபயோகிக்குமாறு அவ்வளவு அபாயமற்றது, சௌகரியமானது.

**மூக்கு உபத்திரவங்கள், தலை பாரம், சளி ஜுரம் இன்னும் சுவாசாசய நோய்களுக்கெல்லாம் சிபாரிசு செய்யப்படுவது. எல்லா கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்.**





*Ad. No.*




## சோம்பலுணர்ச்சி நீங்கி விடும்

............ உங்கள் சரீர பத்ததியி விருந்து கழிவுப் பொருள்கள் நீங்கிய உடனேயே. ப்ரூக்லாக்ஸ் - மலச்சிக்கல் ஏற்படுவதற்கு மூலஸ்தானமான குடலினுள் சென்று வலியைத் தவிர்க்கிறது. ப்ரூக்லாக்ஸ் ருசியிலும், தோற்றத்திலும் குழந்தைகள் விரும்பும் சாக்லெட்டை ஒத்திருக்கிறது.

# ப்ரூக்லாக்ஸ்

**சாக்லெட் லாக்ஸெடிவ்**

டின் ஒன்றுக்கு அணா பத்து. எங்கும் கிடைக்கும்

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜெண்டுகள்:

ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி, 99-A, அரமனைக்காரத் தெரு, மதராஸ்


NO.. 6

REGD. No. M. 4392

License No. 18
Licensed to post without prepayment




ராஜா ஸ்னோ,
ஹேர் ஆயில், கஸ்தூரிஸோப்.

MANYAM & CO., MADRAS, BANGALORE, BOMBAY.

பம்பாய் ஆபீஸ்: 142, ஓல்டு மோடி ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு சேல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
மெஸ்ஸர்ஸ். துரை, அருள் & கோ., லிட்., 93, கெய்ஸர் தெரு, கொழும்பு